193

REGD. No. M 1190







# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

Vol. 28. பொருளடக்கம். No. 10.

சுபானு௵ சித்திரை மீ க௨



உள்ளடக்கம்.









# ஜாதக சாகரம்

**இதன் விலை ரூ. 3—0—0**

இவற்றுள் எண்வகை ஆயுர்த்தாய கணிதத்தையும், மய, யவன, மணித்த, ஜீவசர்வ சித்தசேன, வராக மிகிராதியோர் முதலியவர்களின் அபிப்பிராயங்களையும், இவர்களது முக்கிய கொள்கையான, நைசர்க்கிய ஆயுர்த்தாயத்தையும், பிண்டாயுர்தாயம், அமிர்சாயுர்த்தாயத்தையும் தெளிவாய் விளக்கியுள்ளதுடன், ஜாதகபலம் சொல்வோரின் மனச் சந்தேகங்களை நீக்கத்தகுந்த முறையில் எழுதி அச்சிட்டு வெளியிட்டதுடன், எட்டையபுரம் சோதிட சங்கத் தலைவர் S. குருதாஸப் பிள்ளையவர்களால் மதிக்கப்பட்டதும், மற்றும் அனேக தமிழ் வல்லவராலும், பல சோதிட சாஸ்திரீகர்களும் சம்மதிக்கும் வண்ணமாய்ப் பல்லாண்டுகளாய் அப் பல்லோர் கூறிய ல்ல் வேறு மொழிகளையும் தெள்ளிய செந்தமிழில் இதில் விளக்கப்பட்டிருக்கிறது.

**ஜாதக சாகரம். 2-ம் பாகம் (அச்சில்)**

ஜாதகாம்ருத பல விமர்சம் என்னும்

# ஜாதக கணித சாகரம்

யுரதொரு நக்ஷத்திர பாகத்தில் வருகின்ற எந்த க்ரஹமாவது அந்த நக்ஷத்திர சுபாவத்திற்கு ஒற்றுமை அல்லது வேற்றுமையுற்றதா யிருக்குமானால் நக்ஷத்திரத்தினுடையவும் கிரஹத்தினுடையவும் சுபாவ குணம் தேச கால வர்த்தமானங்கட்குத் தக்கபடி பேதித்து விளங்கும். அதாவது நமது பூமியின் சுழற்சியால் அதைச் சூழ்ந்துகொண்டிருக்கும் பஞ்சபூதாம்சங்களை நுட்ப நேரந்தோறும் கவர்ச்சியிற் துவாரா நெருங்கி கலைத்து மாறுதலை யுண்டாக்கும். அதனாலேயே பிரபஞ்சத்தில் உலக மாறுதல்களும் பேதங்களும் நேரிடுகின்றன.

இந்த இரகசியத்தை விளக்கிக் காட்டும் பொருட்டே சோதிட சாஸ்திரம் ஏற்பட்டிருக்கின்றது. ஜோதிடத்தைப் பற்றிய எல்லாவற்றிற்கும் ஆதாரம் முக்கியமாய் பிருகத் ஜாதகம். அதை மலையாளத்தில் ஹோரை என்பார்கள். இந்த ஜாதக கணித சாகரம் என்னும் புத்தகம் வேதம் எப்படியோ அப்படிப்போல ஜோதிடத்திற்குத் தாயாகும்.

**இதன் விலை ரூபா 1—8—0**

# ஆனந்தபோதினி பாவ ஸ்புட கணனம்

## ஜோதிடர்களுக்கு உற்ற தோழன்

12 பாவங்களையும் எளிதில் ஸ்புடம் பண்ணி ஜாதகங்களைக் கணிப்பதற்கும், பல பாவ நிர்ணயங்களுக்கு முக்கியமாக வேண்டிய எல்லா விவரங்களையும் அறிவதற்கும் இது பேருதவியாக இருக்கும். ஜோதிட சாஸ்திரத்தில் சாதாரண ஞானமுடையவர்களுங் கூட, இப் புத்தகத்தின் உதவியைக் கொண்டு எளிதாகக் கணனங்களைச் செய்து கொள்ளலாம்.

**இதன் விலை ரூபா 1—8—0**

# நிமித்தகுறி சாஸ்திரம்

மனதில் நினைத்துக் கொள்ளும் காரியங்களையும் அவற்றின் பலா[illegible]களையும் அறிந்து சொல்லும் மார்க்கங்கள் விளக்கமாகக் கூறப்பட[illegible]து. இது சோதிடர்களுக்கு மிகவும் உபயோகமானது.

**இதன் விலை அணா 2.**

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

“எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.”—திருவள்ளுவர்.



| தொகுதி | சுபானு௵ சித்திரைமீ ௧௨ | பகுதி |
| --- | --- | --- |
| 28 | 1943௵ ஏப்ரல்மீ 14உ | 10 |

## கடவுள் வணக்கம்.

மண்ணுளாய் கொல்! விண்ணுளாய் கொல்!
மண்ணுளே மயங்கிநின்று
எண்ணும் எண்ணகப்படாய் கொல்!
என்னமாயை! நின்தமர்
கண்ணுளாய் கொல்! சேயை கொல்!
அனந்தன் மேற்கிடந்த எம்
புண்ணியா! புனத்துழாய் அலங்கல்
எம் புனிதனே! (1)

மாயம்செய்யேல் என்னை உன் திருமார்வத்து
மாலை நங்கை
வாசம்செய் பூங்குழலாள் திருவாணை!
நின் ஆணை கண்டாய்!
நேசம்செய்து உன்னோடு என்னை உயிர்
வேறுஇன்றி ஒன்றாக்வே
கூசம்செய்யாது கொண்டாய் என்னைக்
கூவிக்கொள்ளாய் வந்துஅந்தோ! (2)

முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா!
என் பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே!
என் கள்வா!
தனியேன் ஆருயிரே! என்தலைமிசையாய்
வந்திட்டு
இனிநான் போகவொட்டேன் ஒன்றும்மாயம்
செய்யேல் என்னையே. (3)






# சுபானு சுகந் தருக!

இன்று சுபானு ஆண்டு பிறந்திருக்கிறது. இவ்வாண்டு மக்களுக்குச் சுகத்தைத் தருமா? ஜனசமுதாயத்துக்குச் சுபோதயத்தை யுண்டாக்குமா? என்ற கேள்விகள் ஒவ்வொருவர் உள்ளத்தும் எழுகின்றன. சமீபகால உலகப் போராட்டத்தின் பயனாக, பலவகையிலும் அல்லலுற்று அயர்ந்துபோயிருக்கும் மக்களுக்குச் சுபானு ஆண்டு என்றதும், இதில் உள்ள 'சுப' என்னும் மங்கல ஒலியால் சுபத்தையும், சுபீக்ஷத்தையும் உண்டாக்கும் என்ற ஒரு நம்பிக்கை உதயமாகிறது. "கஞ்சி வரதப்பா" என்று ஒரு பக்தன் கடவுளைத் தொழ, பலநாள் பட்டினியால் வாடும் ஏழை ஒருவன் 'எங்கு வருதப்பா' என்று கேட்டான் என்று சொல்வ துண்டல்லவா! அவ்வேழையின் நிலையில்தான் இன்று நம் நாட்டு மக்கள் இருக்கின்றனர்.

சுபானு வருஷத்தின் பலன் என்ன? இவ்வாண்டு பிறக்கும் நேரத்தில் கிரகங்கள் நிற்கும் நிலைகளை ஆதாரமாகக் கொண்டு கூறப்படும் இவ் வருஷத்துக்குரிய பலன் என்ன? நமது 'ஆனந்தபோதினி' சுத்தத் திருக்கணிதப் பஞ்சாங்கத்தில் கூறப்பட்டிருக்கும் வருஷ பலனை ஆராய்ந்து பார்த்ததில், சுபானு வருஷம் முக்கியமாக உலகில் சமாதானத்தையும் அமைதியையும் நிலவும்படி செய்யும் என்று அறிகிறோம். மேலும், அப் பஞ்சாங்கம் "போர் விருத்தி மிகும்; காப்பு இனங்களின் பெருக்கமும் முக்கியங் கொண்டதாக இருக்கும். கலைகள் உலகில் எல்லா பாகங்களிலும் முன்னேற்ற மடையும். கலைஞர்கள் புதுமைகளைச் சிருஷ்டிப்பார்கள். ஆராய்ச்சி விழைவு உன்னதங் கொண்டிருக்கும், சமூக வாழ்வு சம பலனில் நிகழும்,..............உலகில் பரிசுத்த விருத்தியும் தர்மப் போரும் சத்திய சோதனைகளும் முக்கியம் வாய்ந்தனவாக இருக்கும். போதிய அளவில் பூமி பலிதங்களும் தொழில் ஏற்றங்களும் உண்டாகும். பொருளாதாயங்கள் குறிப்பிடத்

தக்க விதம் எங்கும் உன்னதங் கொண்டிருக்கும்" என்று முக்கியமாக விவரித்திருக்கிறது. இவ் வருஷத்தில் உண்டாகும் சூரிய—சந்திர கிரஹணங்களின் பயனாகச் சில பலா பலன்களும் நிகழும் என்றும், காட்சிக்குரிய சந்திரகிரஹணம் தெரியக்கூடிய பிரதேசங்களில் கால மழையும் பயிர்ச் செழிப்பும், தொழில் மேன்மையும், கலை யபிவிருத்தியும் உண்டாகும் என்றும், மக்கள் உற்சாகமாக இருப்பார்கள் என்றும் சொல்லப்பட் டிருக்கிறது. நாம் வேண்டுவதும் அது தானே!

ஐரோப்பா மகாயுத்தம் ஏற்பட்ட காலத்திலிருந்து அதாவது கடந்த மூன்று வருஷங்களாக நம் நாடும் மக்களும் பல விதமாகக் கஷ்ட நஷ்டங்களை அனுபவித்து வருகின்றனர். யுத்த நெருக்கடி ஒரு பக்கம்; அதன் எதிரொலியாக எழுந்த அரசியல் நெருக்கடி * மற்றொரு பக்கம்; இவ்விரு நெருக்கடிகளும் சேர்ந்து, உணவுப் பொருட் பஞ்சம், உடைப் பஞ்சம் முதலிய பல எண்ணற்ற நெருக்கடிகளை ஏற்படுத்தி விட்டிருக்கின்றன. தாங்க முடியாத இக்கஷ்டங்களால் மக்கள் துக்கமும் மனக் கசப்பும் கொண்டிருக்கின்றனர். தற்சமயமுள்ள கஷ்டங்களுக்கு நிவாரணமே ஏற்படாதா? இக்கஷ்டங்களைப் போக்க யாரும் முன்வர மாட்டார்களா? என்று எண்ணி ஏங்குகின்றனர். தேசத்தில் நிலவியுள்ள இக்கஷ்ட நஷ்டங்களைத் தீர்க்கவேண்டியது அரசாங்கத்தின் கடமையாகும். ஆனால், சர்க்காரோ உள்ள நிலைமை யறிந்து உதவுபவர்களாகக் காணோம். இச் சமயத்தில் தேசத்துக்கும் மக்களுக்கும் சேவை புரிந்து வந்த மகாத்மா காந்தி முதலிய தேசத் தலைவர்களும் சர்க்காரால் சிறைப்படுத்தப்பட் டிருக்கின்றனர். ஆகவே, நாட்டு மக்களின் துயரத்துக்கு மீட்சி யிருப்பதாகவே தெரியவில்லை. இன்று முக்கியமாக மக்கள் வேண்டுவதெல்லாம் வயிற்றுக்கு உணவும், உடுக்க உடையுமே யாகும். இம் முக்கியப் பிரச்சினையைத் தீர்த்து வைக்க, வல்லவர்கள் முன் வரவேண்டும். அவர்கள் அரசாங்க அதிகாரிகளா யிருந்தாலும், மற்ற தேசத் தலைவர்களா யிருந்தாலும் சரி; அது பற்றி நமக்கு அக்கறையில்லை. பெருங் கிழவரான ஆசார்ய-பி. ஸி. ரே இதைத் தான் கேட்டுக் கொள்ளுகிறார். அவர் இன்றைய நிலைமையை வெகு நன்றாக எடுத்துக்காட்டி யிருக்கிறார்:—

"நம் நாட்டு மக்களின் கதறல் - வயோதிகம், நோய் காரணமாகப் படுத்த படுக்கையாக இருக்கும் நிலையில் உள்ள என் செவியில் விழுகிறது. அவர்கள் அநுபவித்துவரும் துயரங்களுக்கு எல்லையே இல்லை. நோக்குமிடந் தோறும் பட்டினியால் வாடுபவர்களது கூக்குரல். இன்னும் கொஞ்சகாலத்தில் உடுக்க உடையுமின்றி நாம் தவிக்கப் போகிறோம்.

உணவுப் பொருள் நிலைமை வெகு கோரமாக இருக்கிறது. நமக்குக் கதிமோட்சம் உண்டா? என்று மக்கள் அலறும்படியான அளவுக்கு அது கடுமையாக இருக்கிறது.

உணவு, உடைகளுக்குத் தட்டு ஏற்பட்டிருக்கும் நிலையின் கொடூரத்தை மக்கள் உணர வேண்டும். விலைவாசிகள் விஷம் போல் ஏறி வருவதையும் அவர்கள் உணரவேண்டும்.' உடனே நிவர்த்தி தேட நாம் அனைவரும் யோசிக்க வேண்டும்.

நம்முடைய உயிர் வாழ்வுக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. ஜனங்களையும் அவர்களுடைய வீடு வாசல்களையும் காப்பாற்றி ஆகவேண்டும். ஆகவே, ஆபத்து மிகுந்த இந்நேரத்தில் பரஸ்பர வேற்றுமைகளை மறந்து ஒன்று பட்டு சிந்தித்துச் செயல் புரியுமாறு நான் அனைவரையும் கேட்டுக் கொள்ளுகிறேன்."

ஆசார்யா பி. ஸி. ரே கூறியிருப்பது போல், இன்று ஒன்று பட்டால் தான் நமக்கு வாழ்வு உண்டு. "உலகில் ஒற்றுமையும் அமைதியும் நிலவும் பக்ஷத்தில் எதுவும், கஷ்டமில்லை" என்று பிரபல ஆங்கிலப் பேராசிரியர் மிஸ்டர் எச். ஜி. வெல்ஸ் கூறியிருப்பது இங்கு கவனிக்கத் தக்கது. ஆகவே, நாம் இன்று செய்ய வேண்டுவது— நம்மை வாட்டி வரும் பீடைகளைப் போக்குவதற்குச் செய்ய வேண்டுவது, முதலில் நம் நாட்டிலுள்ள அனைவரும், சாதி சமய அரசியல் வேற்றுமை பாராட்டாது ஒற்றுமைப் பட வேண்டும். ஒன்று பட்டால் அரசியல் துறையில் மட்டுமல்ல; அனைத்திலும் நன்மை பெறுவோம். மக்களிடையே ஒற்றுமையும் சமாதானமும் நிலவச் செய்வதற்காக ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள பல்வேறுபட்ட மக்களும் ஒன்றுகூடித் தங்களுக்குரிய தேவைகளைப் பிறர் உதவியை எதிர்பாராமலே பூர்த்தி செய்து கொள்ளவேண்டும். 'நிறபேத உணர்ச்சியாலும், வகுப்பு வாத உணர்ச்சியாலும் நம் சமூகம் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது; தேசீய முற்போக்கு ஏற்படவில்லை என்று மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரி, நீதிபதி பதஞ்சலி சாஸ்திரி போன்ற மிதவாத, வைதீகப் போக்குள்ள கனவான்களே உணர்ந்து வருந்தக்கூடிய நிலை யேற்பட்டிருக்கிறது. இந்நிலையை மாற்ற முயன்று நாம் வெற்றி கொண்டுவிட்டால், நம் சுதந்திர கோரிக்கையை எந்த வல்லரசும் தடைசெய்ய முடியாது. முதலில் நம் சமூகத்தைப் பிணித்துள்ள வேற்றுமைத் தளைகளையறுத்தெறிந்துவிட்டு ஒற்றுமைப்பட்டு விட்டோமானால், நாட்டு அடிமைத் தளையை வெகு எளிதில் அறுத்தெறிந்து விட நம்மால் முடியும். ஆகவே, நம் மக்களுக்குப் பலத்தையும், வாழ்க்கையில் உற்சாகத்தையும் தரும் என்று நம்பி, அவ்வகையில், சுபானு வருஷத்தை மனமுவந்து வரவேற்கிறோம்.

# சந்தாநேயர்களுக்கு அறிக்கை

இந்தியா சர்க்கார் சென்ற பிப்ரவரி மாதம் 27-ந் தேதி யன்று பத்திரிகைகள் விலை நிர்ணயம் சம்பந்தமாக அறிக்கை யொன்று வெளியிட்டதையும், ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து இன்னின்ன அளவுள்ள பத்திரிகைகள் இன்னின்ன விலைக்கு இவ்வளவு பக்கங்கள்தான் வெளியிடவேண்டும் என்று சர்க்கார் நிர்ணயஞ் செய்திருப்பதையும் வாசக நேயர்கள் அறிந்திருப்பார்கள். இச்சர்க்கார் உத்தரவு மாதப் பத்திரிகைகளைக் கட்டுப்படுத்தா தெனினும், காகிதம் கிடைப்பது மிகவும் அருமையாக இருப்பதால், நாமும் இதுபற்றி மிகவும் சிந்தனை செய்ய வேண்டியதாயிற்று. போதினி இதழை இன்னும் சந்தா விகிதத்தை யேற்றுவதா? அல்லது இப்போதுள்ள சந்தா விகிதத்துக்குத் தகுந்தபடி பக்கங்களைக் குறைப்பதா? என்று. நாம் ஆதியிலிருந்தே நம் தேசம் ஏழை மக்கள் நிறைந்த தேசமாதலால், வெறும் லாபத்தையே குறிக்கோளாகக் கொண்டு பத்திரிகையை நடத்துவது உசிதமல்ல; சாதாரண ஏழை மக்களும் வாங்கிப் படித்துப் பயன் பெறத்தக்க விதமாக மிகக் குறைந்த சந்தா விகிதத்தில் வெளியிட வேண்டும் என்ற உயரிய நோக்கத்துடனேயே நடத்திவருகிறோம்; ஆதலால், விலையை அதிகப்படுத்தினால், மக்களுக்குக் கஷ்டமாயிருக்குமே! அதுவும் உணவுப் பொருள்கள் உட்பட மக்கள் தேவைக்கான பொருள்களெல்லாம் இரண்டத்தனை மூன்றத்தனையாக விலை யேறியுள்ள இக்காலத்தில் பத்திரிகைகளின் விலையையும் ஏற்றிவிட்டால், என்ன செய்வார்கள்? என்றெல்லாம் எண்ணினோம். இப்போதுள்ள சந்தா விகிதத்துக்குத் தக்கபடி பக்கங்களைக் குறைத்து வெளியிடலாமா என்று கலந்து ஆலோசித்ததில் வாசகநேயர்கள் பலர் இந்த யோசனையை ஏற்கவில்லை. ஆகவே, வேறு வழியின்றி, நாம் இப்போது வெளியிடும் 40 பக்கங்களோடு 8 பக்கங்களைச் சேர்த்து, 48 பக்கங்களை வெளியிட்டு, சர்க்காரின் புது உத்திரவுப்படி, போதினியின் சந்தா விகிதத்தையும் பின்கண்டவாறு உயர்த்தியிருக்கிறோம்.

| | ஆண்டு சந்தா | தனிப்பிரதி விலை |
|---|---|---|
| உள்நாடு | ரூ. 2—0—0 | 0—3—0 |
| வெளிநாடு | ரூ. 3—0—0 | 0—4—0 |

இவ்விலை யேற்றம் சர்க்கார் உத்திரவு அமுலிலிருக்கும் வரைதான் தற்காலிகமாக இருக்கும். கடவுள் அருளால், காகிதப் பஞ்சம் தீர்ந்து சர்க்கார் உத்தரவும் ரத்து செய்யப்பட்டால், பழையபடி குறைந்த விலையில் நிறைய பக்கங்களைக் கொடுப்போம். தற்போதைய நிலையில் கலைவளர்ச்சிக்கான ரஸனை மிகுந்த புது அம்சங்களை எவ்வளவு தர இயலுமோ அவ்வளவும் அளிப்போம் என்று உறுதி கூறுகிறோம்.

ஆகவே, நம் சந்தா நேயர்கள் இதுவரை ஆதரித்து வந்ததுபோலவே, இனியும் ஆதரவு காட்டுவார்கள் என்று நம்புகிறோம்.

**குறிப்பு:**—சந்தா நேயர்களுக்கு இதுவரை பத்திரிகை அனுப்பப்பட்டுள்ளது போக, பாக்கியிருக்கும் பணத்திற்கு இந்த சித்திரை இதழிலிருந்து புதிய சந்தா விகிதப்படி வரவு வைத்து வைகாசி மாதம் வரை பத்திரிகை அனுப்பப்படும். ஆனி மாத இதழுக்கு நான்கணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ள வேண்டும். அல்லது 29-ம் வருஷத்திய சந்தா விகிதத்தோடு இந்நான்கணாவையும் சேர்த்து வைகாசி மாதம் 28-ந் தேதிக்குள் அனுப்பிவிட வேண்டும்.

# விளங்குக! ★

("நீலா")
★

"ஒருயி ரும்துன் புற்றிடச் செய்யா
முதன்மை அறம்புவி முழுதும் பரம்புக!
துன்பம்எவ் வுயிரையும் துன்னு தொழிக!
பகையுந் துயரும் பயமும் நீங்கி
எல்லா வுயிர்களும் இன்பம் எய்துக!
அனைத்துயிர் களும்மன வமைதியை அடைக!
நன்மைஎங் கெங்குமே நண்ணியோங் கிடுக!
தீமைஎவ் வெவருமே செயவொணு தாக!
அறிவைப் பெருக்கலால் அருஞ்செயல் செய்லால்
பெறுதற் கரியநற் பேறுக ளெல்லாம்
யாவரும் எய்தி இன்புடன் வாழ்க!"

(சருவ சன செபம்.)

* * * *

நீலப் பெருங்கடலும்
வானப் பெருங் கடலும்
முத்தமிடும் முனையிலே!
மண்ணும் விண்ணும்
தழுவத் துடிக்கும் முகட்டிலே!
ஓர் சிவந்த ஒளி!
ஒரு சிவந்த ஜோதி!
காதலர் இதழ்களில்
மோதும் புன்னகை போல!
இதோ......! இதோ......!!
"**சுபானு**"வின் புறப்பாடு!
எங்கும் பேரொளி...........!
எங்கணும் ஆனந்தம்! ஆரவாரம்!
ஆண்டவனின் அருளொளி கண்ட
அடியவர் போல்.........!

* *

**செங்கதிர்ச் செல்வ! வருக! வருக!!**
நல்லோர் வரவால் நகைமுகங்
கொண்டின் புறுதார் யார்?
பெரியோர் வரவால் பீடும்
பெருமையும் பெறுதார் யார்?

நின் அன்பொளியால்! அருளொளியால்!
இந்த அஞ்ஞான உலகம் அயர்வு நீங்கி
எழ வேண்டுகின்றேம்......!
**உன்னருளாலே......! உன்றுள் வணங்கி**
உயர்வடைய விழைகின்றேம்......!
இஃதொன்றே சருவ சன செபமும் ஆம்!
**வணக்கம்! வணக்கம்!!! வணக்கம்!!!**

*வினாவிற்கு விடை*

# தமிழகத்தில் வடமொழிப் பெயர்

## 1

ஆனந்தபோதியின் சித்திரபானு பங்குனித்திங்கள் இதழிலே, 393-ம் பக்கத்தில் 'ஐய வினா' ஒன்றிருக்கிறது. அதைக் கண்ட அறிஞர்கள், அதற்கு விடையளிக்க முன் வராவிட்டாலும், தக்க சமாதானமாவது தம் நெஞ்சிற்குச் சொல்லி இருப்பார்கள்—என்பதில் ஐயமில்லை. நிற்க,

சாதாரணமாக நமக்கு நாள்தோறும் எவ்வளவோ ஐயங்கள் எழுகின்றன. அவற்றுள் நாமே ஆழ்ந்து சிந்திப்பதால் தீர்ந்து விடுகின்றன. சில ஐயங்கள், தீரா விட்டாலும், நாளடைவில் அனுபவ அலைகள் நம்மேல் மோதும்போது, நாம் அறிந்து கொள்ள நேர்ந்து விடுகிறது.

அப்படி ஆகக் கூடியதுதான், திருவாட்டி சி. மீனாட்சி அம்மாள் எழுப்பிய ஐய வினாவும். இருந்தாலும், எனக்குத் தெரிந்த இரண்டொரு செய்திகளை விடையாகத் தருவதில் எவ்வளவு நேரம் கழியுமோ, அவ்வளவு நேரமும் இன்பமாகக் கழிவதாய் என் எண்ணம்! ஆதலின்,.................

ஆனால், ஒன்று. அறிஞர்கள் கூறும் விடைதான் ஒப்புக் கொள்ளப்படும் என்றால், என் பதிலை நான் 'வாபஸ்' பெற்றுக் கொள்ளத் தயார் என்பதையும் கூறி விடுகிறேன்.

அவையடக்கத்தை இதோடு நிறுத்திக்கொண்டுவிடுகிறேன்.

"தனித்தமிழே வழங்கி வந்த தமிழ்நாட்டில்......வடமொழிப் பெயர்கள் வந்த வரலாறு என்ன?" என்பதுதான் ஐய வினா. ஆனால், தமிழ்நாட்டில் தனித் தமிழேதான் வழங்கி வந்தது என்பதற்கு ஆதாரம் ஒன்றும் குறிப்பிடப் படவில்லை. உண்மையில் ஆதாரமும் இல்லை..............

ஆகவே, நூற்றுக்கு ஒரு சொல்லேனும் வடமொழி கலந்திருந்தது என்று சொல்வதில் தவறில்லை. ஆதாரம், அநேகம்.

உதாரணமாக, காய்சின வழுதி என்னும் பாண்டியன் அமைத்த முதற் (றமிழ்) சங்கத்திற்குக் குரு பீடம், அகத்தியர். அகஸ்தியர் தானே, அகத்தியர்! அவர் எங்கிருந்து வந்தார்? அவரைப்பற்றிய கதைகள், என்ன கூறுகின்றன? விரிப்பின்—பெருகும்.

அகத்தியரின் மாணாக்கர் பன்னிருவர். அவர்களுள் முக்கியமானவர், திரண தூமாக்கினி; அதாவது, தொல்காப்பியா என்பவர். அவரியற்றியது; தொல்காப்பியம். அதில் எத்தனையோ வடமொழிகளைப் பொறுக்கலாம் இன்றும்!

முதல், இடை, கடை என்ற மூன்று சங்கங்களின் நோக்கம், தமிழ்மொழியை எல்லா வகையிலும் வளர்த்ததே; தழைக்கச்

செய்ததே ஆகும்;—தவிர, அன்னிய மொழியே தமிழில் கலவா திருக்கவேண்டும் என்று காவல் புரிந்ததல்ல—புரிவதல்ல அவற்றின் நோக்கம். "திசைச்சொல்" என்ற பகுப்பு, எந்தக் காலத்திலும் இருந்தது; இருக்கக் கூடியது! அதை எந்தநாட்டிலும், எந்த மொழியிலும் நிராகரிக்க முடியாது. வேண்டுமானால், திசைச்சொல் கலவாமல் எழுதலாம்; ஆனால், உரிய தமிழ்ச் சொல்லைப் பொறுக்கி எடுப்பதற்குள், கருத்துச் சிதையாமல் இருக்க ஒவ்வொருவரும் அவதான சக்தி யுடையவர்களாக இருக்கவேண்டும்; அல்லது, கருத்தைப் பளிச்சென்று விளக்கும் புதுத் தமிழ்ச் சொற்களைப் படைக்க ஆற்றல் உடையவர்களாக இருக்கவேண்டும்; இரண்டும் இல்லாதவர்கள், இரண்டொரு அன்னிய மொழிகளைத் "திசைச்சொல்" என்ற உரிமையில் கலந்து கொள்ளத்தான் நேரிடும்; இல்லாவிட்டால், அந்தோ! எழுங் கருத்துக்கள், சிலருக்கு 'மக்கர்' பண்ணி விட்டு நகர்ந்து விடுமே!

பெரிய—உயர்ந்த கருத்துக்களையும், நாகரிகத்தையும் தந்த நமது சங்க கால மூதாதையர்களின் சங்க இலக்கியங்களில் கூட, வடமொழி இரண்டொன்று கலந்திருக்கிற தென்றால், சில நூற்றாண்டுகளுக்கு முன் அதுவும், ஆரியர்கள் ஆக்கிரமிப்பு மிஞ்சிப் போன காலத்தி லெழுந்த புராண நூல்களிலே, நூற்றுக்கு ஐம்பது வடமொழி கலந்திருத்தலில் என்ன ஆச்சர்ய மிருக்கிறது? ஆனால், அவற்றைத் 'திசைச் சொல்' என்று ஏற்றுக் கொள்வதற்கில்லை.

தமிழகத்தையே ஆரியகமாகவும், தமிழையே ஆரியமாகவும் மாற்றிவிட முயன்ற காலத்திலே, முதலில் ஆரியர்களால் உற்பத்தி செய்யப்பட்ட நூல்களைச் சார்ந்தவை—திருவிளையாடல் புராணமும், அது போன்றவையும். அவைகளில் நாம் முழுகி எழுந்து, 'எழுபத்தைந்து தமிழ் மன்னர்களுடைய பெயர்களுள் ஒன்றேனும் தமிழ்ப் பெயராகக் காணோமே!' என்று நாம் ஆத்திரப் படுவதைக் காட்டிலும், 'ஆங்கிலோ—இந்தியர்' என்ற பிரிவு போல, "ஆரியத் தமிழ் நூல்" என்று, ஓர் பிரிவு கொடுத்துத் தனியாக அவற்றை ஓர் மூலையில் அடுக்கி விட்டால் தீர்ந்தது; ஆங்கில நூற்களை நம் வீட்டில் அடுக்கி வைத்துக் கொண்டிருக்கவில்லையா, அதைப்போலவே தான் இதுவும்.

ஆரியரின் "திறமை"க்குப் பாத்திரமாக மயங்கிப்போன தமிழ் மன்னவர்கள் பெயர் போனாலும் போகட்டும்; தமிழ்நாட்டு மக்களுடைய பெயர்களெல்லாம் வடமொழிப் பெயர்களாகக் காணப்படுகின்றனவே; நான், என்னென்பது?—என்று மூக்கின்மேல் விரலை வைத்துக்கொண்டு, ஆச்சரியப்பட வேண்டியதில்லை, திருவாட்டி சி. மீனாட்சி அம்மாள்! ஏனென்றால், "அரசன் எவ்வழி, அவ்வழி குடிகள்" வேறு என்ன காரணம் இருக்க முடியும?

ஆரியர்கள், இன்று நேற்று தமிழ்நாட்டில் குடி ஏறினார்கள்? அகஸ்தியரும், அவரைப் பின்தொடர் மாணக்கரும் வட நாட்டினர்—அதாவது ஆரியர்கள் அல்லவா? சங்க இலக்கியப் பாட்டுகள்

புனைந்தவர்களுள் சிலர் ஆரியர்கள் அல்லவா? ஆனால், அவர்கள், தம்மை வளர்த்த தமிழ்த் தாய்க்குத் துரோகம் செய்யவில்லை; ஆதலினாலேயே அவர்கள் தந்த அருந்தமிழ் நூல்களுள், பாக்கள் வடமொழிப் பதங்களைத் திணிக்கவில்லை. பின் அவர்களைத்தொடர்ந்து வயிறு வளர்க்க வந்த ஆரியர்களே தமிழ்த்தாய் செய்த நன்றியைக் கொன்றார்கள்; தமிழில் மணிப்பிரவாள வியாக்கியானங்கள் செய்தார்கள்; மகிழ்ந்தார்கள்.

மேலும், ஆரியர்கள், தமிழில் புலமைபெற்று, தமிழ் மன்னர்களை அடிக்கடி சந்தித்துப் பல பெரிய பரிசுகள் பெற்றார்கள். அது மட்டுமல்ல; ஆரியர்கள் பலர், தமிழரசர்களின் 'உத்தம' அமைச்சர்களாக மாறினார்கள்; மதியூகத்தால், தமிழ் மக்களை முதலில் வென்றார்கள்; மன்னர்களை மயக்கி மாயவலையிலே சிக்க வைத்தார்கள். தமிழ்ச் சொற்கள் இருக்கவேண்டிய இடங்களை ஆரியச் சொற்கள், அடைத்துக்கொள்ள ஆரம்பித்தன; தமிழ்ப்பெண்கள் இருக்கவேண்டிய இடத்தில் ஆரியப்பெண்கள்...........அடடா, என்னென்னமோ ஆரம்பித்து விட்டேனே! பங்கம்!

சரி, இதோடு நிறுத்திக் கொள்கிறேன். இதற்குமேல் போனால், என் "பேனா" ஆரியரின் சர்வ-வரலாறுகளையும் கிறுக்க ஆரம்பித்து விடும்; அப்புறம் படிக்கச் சகிக்காது—என்பதோடு முடிக்கிறேன். பிற பின்; வாய்ப்பு ஏற்பட்டால்.

—இரட்டணை-ஆர். ருக்மணி-சாம்பசிவம்.

## 2

இன்று நமக்குக் கிடைக்கும் சரித்திர ஆதாரம் ஆரியர்கள் வருகையினின்றுதான். இந்த வடமொழியாளர்களான ஆரியர்கள் தமிழ் நாட்டின் கண்ணே புகுந்து, தமிழ் நாட்டிற் கேற்றபடி, தமிழ் லிபியை யொட்டி "கிரந்தம்" என்று புதியதோர் லிபியை வகுத்து, தமிழரை வசீகரிக்கும் படி, அவ்லிபியிற் பல நூல்கள் வரைந்தனர். இஃதை அன்று தமிழ்ப் புலவர்கள் வெறுத்திருந்தாலும், பாமரராயினோர், இதற்குத் தலை சாய்ந்து விட்டனர். இதன் பயனாகப் பாமரர்கள் வட மொழிச் சொற்கள் பலவற்றை மேற்கொண்டதால், தமிழின் கண்ணே வடமொழிச் சொற்கள் கலந்தன.

மேலும், வடமொழி, தமிழ் மொழியோடு கலக்கப்புகு முன்னரே, வடமொழி பேச்சு வழக்கற்று ஏட்டு வழக்காய் மட்டில் இருக்கும் நிலை அடைந்தது. "ஏட்டு வழக் கொன்றுமேயுள்ள ஒரு மொழியோடு, இருவகை வழக்குமுள்ள ஒரு மொழி கூடி இயங்கப்புகுமாயின், முன்னதன் சொற்களே பின்னதன் கட் சென்று சேருமேயன்றி, பின்னதன் சொற்கள், முன்னதன் கட் சென்று சேரா" இது மொழி நூலின் உண்மைகளிலொன்று. இக்காரணம் பற்றி, வட சொற்கள் தமிழின்கட் புகுந்தன.

இது நிற்க, தென்னாட்டு வட மொழியாளர்கள், சில மக்கள் பெயர், ஊர்ப் பெயர், மலைப் பெயர், ஆற்றுப் பெயர் முதலாயினவற்றை வட

(437-ம் பக்கம் பார்க்க.)

# "கம்பன் இலக்கியத்தின் முன் நாம்-"

**(வீ. செல்லராஜ்)**

18-3-43 "விடுதலை" யில் "செல்லரார்சரே கேண்மின்" என்ற தலைப்பின் கீழ், 14-3-43 "ஆனந்தபோதினி" யில் "எதை எரிப்பது?" என்ற கட்டுரையில் நான் எழுதியவற்றை மறுத்து திரு. ஏ. வி. பி. ஆசைத்தம்பி என்பவர் வெகு காரசாரமாக எழுதியிருந்தார். 'மானம்', 'வெட்கம்', 'இழிகுணம்', 'ஐயகோ' முதலிய காரமான சொற்களைத் தாராளமாகச் சேர்த்திருந்தார்.

"மறையவன் நாவில் நாமகள் உறைவது உண்மையானால் அவள் மலஜலங் கழிப்பது எங்கே?" என்று ஏதோ ஒரு பெரிய கேள்வியைக் கேட்டுவிட்டதாக எண்ணிப் "பாட்டுக்குப் பாட்டெடுத்த தோடு" தமிழர்களின் குறிக் கோட் பத்திரிகையும், தமிழ் நாட்டில் வயதில் முதிர்ந்ததுமான "ஆனந்தபோதினி"யை "ஆரிய அடிவருடி ஏடு" என்று தாக்கி விட்டதாக எண்ணி சந்தோஷப்படவும் நண்பர் மறந்து விடவில்லை. பேச்சு சுதந்திரத்திற்கும் "எல்லோரும் சரிசமானம்" என்ற கொள்கைக்கும் பாடுபடும் இந்நாளில் தன் தேர்ந்த கொள்கையை ஆதரிப்பது ஒரு பத்திரிகையின் குற்றமன்று. "யாரானாலென்ன என் இஷ்டத்திற்கு வணங்கவில்லையேல் திட்டுவேன்" என்றபடி நண்பர் "ஆனந்தபோதினி"யையும் தாக்கியது அவர் தன் "கொள்கை"யை நிலைநிறுத்தியது போலாகும். இனி விவாதத்திற்கு வருவோம்.

"ஐயகோ, தோழரே! 'சிரிப்பதோ, அழுவதோ என்ன செய்வதோ' என்று தெரியாத நீங்கள் இரண்டும் செய்யாமல் வெட்கித் தலைகுனிய வேண்டும்" என்று எனக்கு **அன்புடன்** கட்டளையிடுகிறார். ஆம், நான் வெட்கித் தலைகுனிய வேண்டியதுதான். ஏன்? "ஐயோ, என் உயிரினுமினிய கம்பனையும் எரிக்க கம்பனின் சந்ததியே முன் வந்ததே" என்று அழுவேன். "ஒரு சிலர்—ஏதாவது செய்ய வேண்டும் என்ற கருத்தோடு காரணமில்லாமல் ஏதாவது சொன்னால் நாம் ஏன் அழவேண்டும்?" என்று சிரிப்பேன். இப்பொழுது, "உலகத்தின் மற்றைய முன்னேற்ற நாடுகளெல்லாம் இலக்கியத்தை உயிரினும் மேலாகக் காப்பாற்றி வைக்கத் தீவிர முயற்சியெடுத்துக்கொண் டிருக்கும்போது, என் தமிழ் நாட்டில், என் சகோதரர்களிற் சிலர் "தமிழ்க் கம்பனை எரிக்க வேண்டும்" என்று எழும்பினால் பிற நாட்டினர் முன் நான் எப்படித் தலைநிமிர்ந்து நடக்க முடியும்?" என்று வெட்கித் தலைகுனிகிறேன். நண்பர் ஆசைத்தம்பி என்னை அவரின் ஆசைத்தம்பியாக எண்ணி இம்மாதிரி செய்யும்படி கட்டளையிட்டதற்கு நான் மிகவும் கடமைப்பட்டவனாவேன்.

"ஆணுக்கொரு நீதி வழங்கும் இராமனை" கம்பன் கனவு கண்டதே கிடையாது. ஆசிரியருக்கு அவன் அடங்கி நடந்தான். பெற்றோருக்குக் கீழ்ப்படிந்தான். மனைவியிடம் களங்கமிலா அன்பு செலுத்தினான். சகோதரருக்கு அவன் வஞ்சகம் செய்யவில்லை.

தன் கீழ் வேலை செய்வோருக்கு அவன் சம அந்தஸ்தும் அன்பும் செலுத்தினன். "ஏழை ஏதலன் கீழ்மகன் என்னது," குகனுக்கு "இரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்தான்." "சீதை உன் தோழி; என் தம்பி உன் தம்பி; நீ என் தோழன்" என்று குகனைத் தழுவிக் கொண்டான். கம்பன் சிருஷ்டித்த இந்த இராமன் "ஆளுக்கொரு நீதி காட்டினன்" என்பதற்கு இடமேயில்லை. அசோக வனத்திலே சிறை வைக்கப்பட்டிருந்த சீதை இராமனை யுன்னி வருந்தும் போது அவனின் பராக்கிரமத்தையும் அழகையும் எண்ணி யெண்ணி யுருகவில்லை. "ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய ஏழை வேடனுக்கு (குகனுக்கு) 'எம்பி நின் தம்பி, நீ தோழன், மங்கை கொழுந்தி' எனச்சொன்ன ஆழி நண்பினை உன்னி அழுங்குவாள்" என்றே அவளின் சமத்துவ ஆர்வத்தைக் கம்பன் ஆனந்தமாக் வருணிக்கிறான். தன்னைக் கண்ட அநுமனையும், அவள் "அம்மையாய் அத்தனாய் அப்பனே அருளின் வாழ்வே" என்று கூறிக் கூறிப் புகழுகிறாள். அவன் எப்படி ஆளுக்கொரு நீதி கொண்டிருக்க முடியும்? சுமந்திரனை நோக்கிப் பரதன் "இவன் யார்?" என்று குகனைச் சுட்டிக் காட்டி வினவ, "உங்கள் குலத் தனி நாதற்கு (இராமனுக்கு) உயிர்த்துணைவன்" என்று அவன் கூறுவனாகில் ஆளுக்கொரு நீதி அவன் செலுத்தியிருக்க முடியுமா? "அந்தணனும் தனைவணங்கும் குகன்" என்று ஒரு எளிய வேடுவனைக் கம்பன் கூறுகிறான். பரதனும் குகன் காலில் விழுந்து வணங்கியதாக வருணிக்கிறான். வால்மீகி குகனை பரதன் காலில் வீழ்ந்ததாகக் கூறுவதைக் கம்பன் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? கவரிமான் இனத்தவன் அல்லவா கம்பன்? ஆகவே, ஒரு பெரும் அரசன் ஒரு வேடன் காலில் வீழவும் அனுமதித்த கம்பன் சுத்தத் தமிழர் இராமாயணத்தையே உண்டாக்கினன் என்பதற்குச் சிறிதும் ஐயம் கிடையாது.

உயரிய குணங்களை உயர்த்திப் பேச கம்பன் பின் வாங்கினானில்லை. இராமனிடத்துக் கண்ட உயர் குணங்களை "இராமன் வட்டநாட்டான்" என்பதற்காக அவன் மறுக்கலில்லை. மேலும் கம்பனுடைய இராமன் தமிழன் என்றபோது கம்பன் அவனை உயர்த்திக் கூறக் கூசவில்லை. அதற்காக்க் குருட்டுத் தனமாகப் பின் பற்றவில்லை. இராமனிடத்துள்ள அதிகப் பற்றுதலினால் ஏனையோரிடத்தே காணும் உயர் குணங்களை அவன் கண்டு புகழாமலிருக்கவில்லை. "இராமனைத் தேடி அரசுதர வந்த பரதனின் தியாகத்தை உன்னி, "ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ் தெரியின் அம்ம!" என்று ஆச்சரியப் படுகிறான். அதேபோல் இராவணனின் பின் வாங்கா வீரத்தை கம்பன் வாய்குளிர, மனங்குளிரப் புகழுகிறான். ஆனால் "அறம் வெல்லும் அதர்மம் தோற்கும்" என்பது கம்பனின் அடிப்படையான கொள்கை. இலங்கையிலே எல்லோரும் தன்னை அதைரியப் படுத்த எண்ணி "சீதையை இராமனின் முன் விட்டு மன்னிப்புக் கேள்" என்றபோது இராவணன் அதைரியப் படவில்லை. "படைக்கலம் படைத்த வெல்லாம் கெட்டன வெனினும் வாழ்க்கை கெடாது நற்கிளியனை விட்டிட

எண்ணியோ நான் பிடித்தது" என்று சிறித் தன் ஆண்மையை வெளிக் காட்டுகிறான். "மைந்தனென்; மற்றையோரென்; எஞ்சினீர் வாழ்க்கை வேட்டீர்; உய்ந்து நீர் போவீர், நானே ஊழி வெந்தீயினோங்கிச் சிந்தினன் மனிதரோடும் குரங்கினைத் தீர்ப்பன்" என்று தனியே நின்று போரிடவும் துணிகிறான் சுத்த வீரன் இராவணன். இவ்வளவெல்லாம் இராவணனைப் புகழ்ந்த கம்பன், ஏன் இராமனை அவனினும் உயர்த்திக் கூறுகிறான்? இதற்குக் காரணமில்லாமலில்லை.

ஹிட்லர் ஒரு வீரன் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் அவன் தன் வீரத்தை உலக அழிவிற்கும் சுயநலத்திற்கும் உபயோகிக்கிறான். அவனை நாம் வெறுக்காதிருக்க முடியாது. உலக விரோதி என்று சொல்ல நாம் முன் வருகிறோம். இதே போல் இராவணனும் ஒரு வீரன். அவன் தன் வீரத்தை அதர்ம வழியிலே செலுத்தினான். அதை மட்டும் கம்பன் வெறுத்தான். இராமனும் ஒரு வீரன். அவன் தர்மத்திற்காகத் தன் வீரத்தைச் செலவு செய்தான். ஆகவே அவன் வெற்றி பெற்றான். "அறம் வெல்லும்" என்னும் இயற்கை நியதியை இராவணன் தமிழன் என்பதற்காகக் கம்பனே யல்ல; நமது பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் கூட அவனை மட்டும் போற்றி இராமனை வெறுக்க முடியாது. நண்பரே கூறுகிறார், "ஆளுக்கொரு நீதி செலுத்தும் அரசன் ஆரியனாக இருந்தாலென்ன; தமிழனாக இருந்தாலென்ன" அவனை வெறுக்க வேண்டும் என்கிறார். அதே போலத்தான் கம்பன் எண்ணினான். ஆயினும் இராவணனை வதைக்கும்போது கம்பன் அழுது அழுது அயர்ந்தான். வாடினான், வதங்கினான். அந்தச் சோகக் குறியை அவன் யுத்தகாண்டத்தின் பிற்பகுதியிலே காணலாம். அதிலே கம்பனின் இனிய சுவை இல்லை. அவனின் வானளாவிய கற்பனை காணுமற் போயிற்று. "இதுவும் கம்பன் பாடியதா?" என்று ஐயுறும் வண்ணம் அமைந்திருக்கிறது. இராவணன் இறந்தபின் கம்பன் எப்படி முன்போல் ஆர்வம் காட்டியிருக்க முடியும்? கண்ணும் கருத்துமாக வளர்த்த தமிழனல்லவா இராவணன் கம்பனுக்கு!

இறுதியாக இராம ராஜ்ஜியத்தைப் பற்றிக் கம்பன் பாடவேயில்லை. அதை ஒட்டக் கூத்தர் பாடியதாகச் சரித்திரம் கூறுகிறது. இராவணன் இறந்தபின், இராமன் ஆண்டாலென்ன? இறந்தாலென்ன? "அறம் வெல்லும்" என்ற ஒரு கொள்கைக்காக மட்டும் இராவணனை—தன் அன்பார்ந்த தமிழ் வீரனை—கம்பன் தன் கையாலேயே கொன்றான். இனி தன் கவிதைக்கு வேலை யென்ன? கைசோர்ந்து அத்துடன் முடித்து விட்டான். இராமராஜ்ஜியத்திலே வால்மீகியின் காவியத்தின்படி அட்டூழியங்கள் நடந்திருக்கலாம். அவற்றைக் கம்பன் எழுத எண்ணவில்லை. "இராவணனைக் காண்போம் காண்போம்" என்ற ஆர்வத்திலே கம்பன் ஆரம்பத்திலிருந்த வானளாவிய கற்பனையோடு கவிதை செய்துகொண்டு வந்தான். சுந்தர காண்டத்திலே இராவண

னிடம் அதிகமான தொர்டர்பு வைத்துக்கொள்ளும் போது, அவனின் கவிதை உச்ச நிலையை அடைந்தது. அதன் பின் இராவணன் இறந்தான். அத்துடன் கம்பனின் கவிதாசக்தியும் இறந்தது. இவ்வித தமிழபிமானங்கொண்ட கம்பனை எரிக்க எண்ணும் போது நான் முன் சொன்னபடி சிரிப்பதா, அழுவதா?

மேலும், விதண்டா விவாதத்திலே என் பொழுதைச் சிதைக்க விரும்பவில்லை. நண்பர் மானக்கேடான விஷயங்கள் என்று இராமாயணத்திலே கூறப்பட்டிருக்கும் நிகழ்ச்சிகளைக் கொண்டு வெட்கப் படுகிறார். நண்பரே! தாங்கள் வெட்கப்பட வேண்டிய அவசியமில்லை. நாம் "இராமன் பெரியவனா இராவணன் பெரியவனா" என்று வீண் விவாதம் செய்வதைவிட "கம்பனின் இலக்கியச் சுவை தேனினும் மிக்கதா? தேவாமிர்தத்தினும் மிக்கதா?" என்று வாதிடுவோமானால் தமிழ் நாட்டிற்கு எவ்வளவோ நன்மையுண்டு. அதை விட்டு இருக்கிற இலக்கியத்தை—ஏன் இருக்கிற இலக்கியங்களுக் கெல்லாம் கதிரவன் போன்று விளங்கும் கம்பராமாயணத்தை—அதன் கதையை வைத்துக் கொண்டு எரிக்க விரும்பினால் நாம் என் செய்வது? கம்பனின் கவியமுதத்தில் விழுந்து அனுபவிக்கும் எனக்கு இராமன் ஆரியனா திராவிடனா என்று எண்ண முடியுமா? வானிலே திரியும் மேகங்களைக் கண்டு இன்புறும் ஒருவன், கீழே கிடக்கும் குப்பையைக் கண்டு மகிழுவானா? தேவாமிர்தம் உண்ணும் ஒருவன், கடையிலே புழுதியடைந்து கிடக்கும் பணியாரத்தின் மேல் ஆர்வங் காட்டுவானா? நண்பரே! கம்பனின் கவியமுதை உண்ணுங்கள். கதை சம்பந்தமாக எத்தனை விவாதம் செய்து கொண்டாலும், கம்பனின் இலக்கியச் சுவைக்கு வரும்போது நாம் ஒன்றுவோம். ஆராய்ந்து பார்க்கும் போது கம்பன் கவிதா சக்தியின்முன் நாம் இருவரும் தோளோடு தோளாகச் செல்லும் இரு இணைபிரியாத் தமிழர்களாகவே இருப்போம் என்பது என் தீர்ந்த முடிவு.

---

(433-ம் பக்கத் தொடர்ச்சி.)

மொழி சப்த சாஸ்திரத்திற் கியைந்தவண்ணம், ஓசை வேறுபாடு செய்து கொண்டு, தாங்கள் வகுக்கப் புகுந்த புராணதிகளில் வழங்குவராயினர்.

இத்துணையோடமையாது, தென் மொழியும் வடமொழியும் சரிக்குச் சரி கலக்கும் "மணிப்பிரவாளம்" என்ற புதியதோர் மொழியை உண்டாக்கி ஸ்ரீ புராணம் போன்ற நூல் வகுத்தனர். இம்மட்டோ! தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய ஐவருள் ஒருவரான சேனவரையரும், திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகரும், நன்னூல் செய்த பவணந்தியாரும், சின்னூல் செய்த குணவீர பண்டிதரும், வடமொழியை யொட்டியே எழுதப் போந்தனர்.

இங்ஙனமிருக்க, மேன்மேலெழும் வெள்ளத்தை தமிழ் மக்களால், எத்தனை நாள் தடுத்துக் கொண்டிருத்தல் இயலும்? இங்ஙனமாகவே, தனித் தமிழ் வழங்கிவந்த தமிழ்த் திருநாட்டில், வடமொழிப் பெயர்கள் வந்தன என்று நான் அபிப்பிராயப்படுகிறேன்.

—விருதுநகர்—ஏ. வி. பி. ஏ. தம்பி.

# லிஸபெட்டா (பொக்காச்சியோ)

[கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது]

[இந்தக் கதையை எழுதிய பொக்காச்சியோ, மகா கவி தாந்தேயின் நண்பர். இந்தக் கதை டெக்கமரான் என்ற அவருடைய நூலில் உள்ளது. இக் கதையை வைத்து, ஜான் கீட்ஸ் என்ற ஆங்கிலக் கவிராயன் 'இஸபெல்லா' என்று ஒரு கவிதை புனைந்து இருக்கிறான். தெலுங்கிலும் 'பிரேமலதா' என்ற பெயரோடு இந்தக் கதை, கவிதை யாக்கப்பட் டுள்ளது. தமிழில் எந்த இளம் கவி இதை வைத்துக் கவிதை எழுதி தமிழுலகுக்கு அளிக்கப் போகிறாரோ?]

மெஸீனாவில் மூன்று வாலிபர்கள் இருந்தனர். அம் மூவரும் சகோதரர்கள். வியாபாரம் செய்து வந்தனர். அவர்களுடைய தகப்பனார் இறக்கும் போது அவர்களுக்கு மிகுந்த செல்வத்தை வைத்துவிட்டுச் சென்றார். அவர்களுக்கு லிஸபெட்டா என்ற சகோதரி ஒருத்தி உண்டு. அவள் மாசு மரு வற்ற, அழகும் கலையும் நிரம்பிய யுவதி. ஆனால் என்ன காரணத்தினாலோ அவளை அவர்கள் இன்னும் கல்யாணம் செய்து கொடுக்கவில்லை. இம் மூவரும் தங்களுடைய கடையில் லாரன்ஸோ என்ற வாலிபன் ஒருவனை வேலைக்கு வைத்துக் கொண்டார்கள். அவன் எல்லா வேலைகளையும் செய்வான். நல்ல ரூபவான்; கம்பீரமான தோற்றம் உள்ளவன். லிஸபெட்டாவும் அவனைப் பன் முறைகள் தன் கடைக் கண் வீசிப் பார்த்திருப்பாள். அவனைப்பற்றித் தன் மனதில் சிந்தித்துக் கொண்டே இருப்பாள். நேரத்துக்கு நேரம் இதைக் கவனித்துக் கொண்டிருந்த லாரன்ஸோவும் தன்னுடைய மற்ற காதல் லட்சியங்களை விட்டுவிட்டு இவள் மீதே பாசம் வைக்கத் தொடங்கினான். ஆகவே, ஒருவர் மீது ஒருவர் கொண்ட இருவருடைய காதலும் ஒன்றுக் கொன்று ஏற்றத்தாழ்வின்றி இருந்தன. இருவருடைய இருதயங்களும் ஒன்று கலந்தன. ஒருவர்க் கொருவர் மிகவும் ஆதரவளித்துக் கொள்ளவும், மகிழ்வித்துக் கொள்ளவுமாக இருந்தனர். அவர்கள், தம்முடைய இந்தச் செய்கையை ரகசியமாய்ப் பேணவில்லை. ஒரு நாள் இரவு, லிஸபெட்டா லாரன்ஸோவின் அறைக்குப் போய்க்கொண் டிருக்கையில் அவளுக்குத் தெரியாமலே, அவளை அவளுடைய மூத்த சகோதரன் கண்டு கொண்டான். இதைக் கண்டு அவன் மிகவும் மனம் வருந்தினாலும் நல்ல விவேகமுள்ள இளைஞனானதினாலே தன்னிடமிருந்து ஒரு வார்த்தையையும் நழுவ விடவில்லை. அன்றிரவே, இந்தச் சம்பவத்தை மாறி மாறி பல வழிகளிலும் சிந்தனை செய்த வண்ணமாய்க் கழித்தான். மறுநாள் காலையில், தன் சகோதரர்களிடம் தான் இரவிலே கண்ட லிஸபெட்டா—லாரன்ஸோ விஷயத்தைத் தெரிவித்தான். தமக்கும், தம் சகோதரிக்கும் மானம் போய் விடாதபடிக்கு, இந்த அவலக்ஷண்மான சம்பவம் முற்றிப் போகு முன்பே, பந்தோபஸ்தாகவும் சௌகரியமான முறையிலும் இதை நிறுத்தும் காலம் வரும் வரை, இது விஷயத்தைப் பற்றி ஒன்றும் அறியாதவர் மாதிரி பேசாமல் இருந்து விடவேண்டியது என்று நீண்ட ஆலோசனைக்குப் பிறகு முடிவு கட்டினர். இந்த முடிவை நினைவி லிறுத்திக்கொண்டு அவர்கள் வழக்கம் போலவே, லாரன்ஸோவோடு சிரிப்பதும் கேலி செய்வதுமாக இருந்தனர். கொஞ்ச காலத்திற்குப் பிறகு, நகரங்கள் தோறும் உல்லாஸப் பிரயாணம் செய்யப் போவதாக வெளிக்குக் காட்டிக் கொண்டு லாரன்ஸோவையும் தங்களோடு அழைத்துச் சென்றனர். வெகு தூரத்தில், தனியான ஓர் இடத்திற்கு வந்ததும், தாங்கள் திட்டம் செய்து கொண்டபடி காரியத்தை நிறைவேற்ற தகுந்த இடம் அதுதான் எனக் கொண்டு, அவர்கள் லாரன்ஸோவை இறக்கி அழைத்துச் சென்றனர். ஒருவிதப் பாது

காப்புமற்றிருந்த அவனைக் கொன்று, ஒருவரும் அறியாதபடி புதைத்து விட்டனர். அவர்கள் மெஸீனாவுக்குத் திரும்பி வந்து, அவனை வியாபாரத்தின் நிமித்தம் வெளியூருக்கு அனுப்பி இருப்பதாகக் கூறிவிட்டனர். அடிக்கடி, முன்னால் அவர்கள் அவனை அப்படி அனுப்பியிருப்பதால் 'யாவரும்' அவர்கள் சொன்னதை நம்பினர். ஆனால், லாரன்ஸோ திரும்பி வராததைக் கண்ட லிஸபெட்டா, தன் சகோதரர்களிடம் அவனைப்பற்றி அடிக்கடி மிக்கப் பரபரப்போடு கேட்டுக் கொண்டிருந்தாள். அவனுடைய நீண்ட பிரிவினால் மிகவும் வருந்தினாள். ஒரு நாள் அவள் லாரன்ஸோவைப் பற்றி, அழுத்தி அழுத்திக் கேட்டுக் கொண்டிருக்கையில் அவளுடைய சகோதரனொருவன்,

"இது என்ன அர்த்தம்? லாரன்ஸோ விடத்திலே உனக்கு என்ன ஜோலி? அடிக்கடி இப்படி அவனைப் பற்றிக் கேட்கிறாய்? இனிமேல் எங்களிடம் கேட்காதே. ஆமாம். பார்த்துக்கொள்" என்று சொல்லி விட்டான். மனத் துயரமும் துக்கமும் கொண்ட சிறுமி விஷயம் என்னவென்று அறியாது பயந்தவளாய் ஒன்றும் கேட்கா திருந்து விட்டாள். ஆனால், இரவில் பல சமயங்களில் அவனைக் கழி விரக்கத்தோடு அழைப்பாள்; அவனைத் தன்னிடம் வருமாறு கெஞ்சுவாள்; அவனுடைய பெரும் தாமதத்தை எண்ணி கண்ணீருகுத்து அழுவாள்; எப்போதும் அவன் திரும்பி வருவதையே ஆவலோடு எதிர் பார்த்துக்கொண்டிருப்பாள்; இப்படியே, மனத் தளர்வினால் மெலிந்து போனாள்.

ஆனால், இவ்விதம் இருக்கையில் ஒரு நாள் இரவு லாரன்ஸோ திரும்பி வராததை எண்ணி நெடுநேரம் அழுதுவிட்டு அவள் உறங்குகையில், அவளுடைய கனவில் லாரன்ஸோ வெளுத்துப் போய், சீர்குலைந்து கந்தல் உடையுடன் சோக வயப்பட்டவனாய்த் தோன்றினான். இப்படித் தோன்றிக் கொண்டருக்கையில் அவன்,

"லிஸபெட்டா, என்னையே வருந்தி அழைக்கிறாய்: என் நெடு நாளைய தாமதத்தை எண்ணி உழலுகிறாய்: நான் உன்னிடம் திரும்பி வராததால் என்னை உன் கண்ணீரால் தூற்றுகிறாய்: ஆனால், நான் உன்னிடம் திரும்பி வர இயலாது என்பதை இப்போது உணர்ந்துகொள்: ஏனென்றால் நீ என்னைக் கடைசியாகப் பார்த்த அந்த நாளிலேயே உன் சகோதரர்கள் என்னைக் கொன்றுவிட்டனர்" என்று சொன்னான். பிறகு, அவர்கள், தன்னைப் புதைத்த இடத்தை வர்ணித்துவிட்டு, இனிமேல் தன்னை அழைத்துக்கொண்டும், தன் வருகையை எதிர் பார்த்துக்கொண்டும் இருக்கவேண்டாம் என்று சொல்லிவிட்டு அவன் மறைந்தான். பிறகு, அவள் எழுந்து தான் கண்ட கனவை எண்ணி அழுதாள். விடிந்ததும், அவள் எழுந்து, தன் சகோதரர்களிடம் சொல்லிக் கொள்ளாமல், கனவில் குறிப்பிடப்பட்ட அந்த இடம் தான் கனவில் கண்டவாறே இருக்கிறதா என்று பார்ப்பதற்காக, அந்த இடத்துக்குப் போகத் தீர்மானித்தாள். ஒரு சமயத்தில் இளம் பெண் ஒருத்தி அவர்கள் வீட்டில் அவர்களோடு வசித்து வந்தாள். லிஸபெட்டா செய்யும் காரியங்கள் யாவும் அவளுக்கு நன்றாகத் தெரியும். ஆகவே, அந்தத் தோழியோடு நகரத்தை விட்டுச் சிறிது தூரம் வெளியே காற்று வாங்கப் போவதாகச் சொல்லிவிட்டு, வெகு வேகமாக அந்த இடத்தை நோக்கிச் சென்றாள். அங்கே போய், பரவலாகச் சிதறிக்கிடந்த உலர்ந்த இலைகளை அப்புறப்படுத்திவிட்டு, கடினமற்றிருந்த தரைப்பாகத்தைத் தோண்ட ஆரம்பித்தாள். கொஞ்சதூரம் தோண்டியவுடனேயே அவளுடைய துரதிர்ஷ்டம் பிடித்த காதலனுடைய உடல் அகப்பட்டது. இன்னும் அது அழுகிச் சீர்குலையாமல் இருந்ததால் தான் கனவில் கண்டது உண்மையாகி விட்டது எனக்

கண்டு கொண்டாள். அங்கே யிருந்து கொண்டு அழுவது சரியில்லை என்றும், முடிந்தால் அந்த உடலை எடுத்துக் கொண்டுபோய் வேறு எங்கேயாவது கௌரவமாகச் சமாதி கட்டி வைத்துவிட வேண்டும் என்றும் தீர்மானித்தாள். ஆனால் உடலை எடுத்துக்கொண்டு போவது இயலாத காரியமாதலால் அவள் ஒரு கத்தியை எடுத்து முண்டத்திலிருந்து தலையை வெகு பக்குவமாக வெட்டி எடுத்துக்கொண்டு, அதை ஒரு துணியில் சுற்றித் தன் தோழியின் மடியில் வைத்தாள். பிணத்தின் மீதிப் பாகத்தை மண்ணால் மூடிவிட்டு, ஒருவரும் அறியாதவாறு அந்த இடத்திலிருந்து திரும்பி வீட்டுக்கு வந்து விட்டாள். தன்னுடைய அறையை மூடிக்கொண்டாள். அந்தத் தலையின் ஒவ்வொரு பாகத்திலும் ஆயிரம் தடவைகள் முத்தமிட்டாள்; அதன் மீது தலையைக் குனிந்து கொண்டே, தன் கண்ணீரால் அது நனைந்து நீராடும் மட்டும் அழுதாள். பிறகு ஒரு சிறு அழகான துணியில் அதைச் சுற்றி, துளசி, ஓமம் முதலியவற்றை நடும் ஒரு பானையில் வைத்து அதை மண்ணைப் போட்டு மூடி நிரப்பினாள். அதில் விசேஷமான ஓமச்செடிகளை நட்டு, அதற்குத் தன்னுடைய கண்ணீர், அல்லது ரோஜா மலர்களால் வாசமூட்டப்பெற்ற தண்ணீர்—ஏதாவது ஒன்றினால் நீர் பாய்ச்சுவாள். அவள், எப்போதும் அந்தப் பானையின் பக்கலில் இருப்பதே வழக்கமாய் விட்டது. லாரன்ஸோவைக் கோவில் கட்டிக் காப்பதுபோல், அவளுடைய ஆத்மா முழுவதும் அதன் மீது கவிந்திருக்கும். அப்படி வெகுநேரம் இருந்து விட்டு, அதன் மீது குனிந்தபடி அந்த ஓமச் செடிகள் சுத்தமாகக் கழுவப்படும் வரைக்கும் கண்ணீர் சிந்தி அழுவாள்.

இந்த இடைவிடாத கவனத்தாலும், தலையானது அழுகி மக்கிக் கொண்டு வருவதால் உரம் பெற்ற மண்ணின் வளத்தாலும் ஓமச்செடிகள் மிகவும் அழகாகவும் வாசமோடும் வளர்ந்து விட்டன. லிஸபெட்டா, தன் வாழ்நாளை இப்படியே போக்கிக்கொண்டு வருவதை அண்டை அயலார் கொஞ்சம் கொஞ்சமாய்க் கவனிக்கலாயினர். அவளுடைய சகோதரர்கள், அவளுடைய அழகு சிதைந்துபோய் கண்கள் புதைபட்டிருந்ததைக் கண்டதும் "இவள் தினந்தோறும் இப்படியே மோசமாகிக்கொண்டு வருகிறாளே" என்று யோசிக்கலாயினர். அதன் பின், அவர்கள் அவளுடைய செயலைக் கண்டு பிடித்துக்கொண்டு, ஓரிரு தடவைகள் அவளைக் கண்டித்தனர். அவள் அவர்களுடைய கண்டிப்பைக் கவனிக்காததால், அவளுக்குத் தெரியாமலே ரகசியமாய் அந்தப் பானையை அப்புறப்படுத்தி விட்டனர். அவள் அதை இழந்ததும், அடிக்கொரு தடவை பிடிவாதமாக அதைக் கெஞ்சிக் கேட்டாள். அவர்கள் அதைத் திருப்பிக் கொடுக்காததால் அவள் அழுவதையும் நிறுத்தவில்லை. கடைசியில் அவள் நோய் வாய்ப்பட்டாள். தன்னுடைய நோய்க் கொடுமையிலும் அந்த ஓமம் நட்ட பானையைக் கேட்பதை நிறுத்தவில்லை. அந்த இளைஞர்கள் இதைக் கண்டு பேராச்சரியம் அடைந்து அந்தப் பானைக்குள் என்ன இருக்கிறது என்று பார்க்கத் தொடங்கினர். மண்ணை எடுத்து வெளியே போட்டதும், துணியையும் அதனுள்ளே இருந்த தலையையும் பார்த்தனர். அது இன்னும் அவ்வளவு அதிகமாகக் கெட்டுப் போகவில்லை. அதன் சுருட்டை மயிரைக் கண்டதும் அது லாரன்ஸோவின் தலை என்பதை அறிந்து கொண்டனர். இதைக் கண்டு ஆச்சரியமுற்று, இந்த விஷயம் பிரசித்தமாய்ப் பரவிவிடக் கூடாதே என்று பயந்து அவர்கள் தலையைக் குழிதோண்டிப் புதைத்து விட்டனர். ரகசியமாய் ஓடி விடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொண்டு மெஸீனாவிலிருந்து நேப்பிள்ஸுக்கு ஓடி விட்டனர். அந்தப் பெண் அழுவதையோ, அந்தப் பானையைக் கெஞ்சிக் கேட்பதையோ நிறுத்தவேயில்லை. இப்படி அழுத வண்ணமாகவே இறந்து போனாள்.

# காந்தியும் சேரமான் பெருஞ்சேரலாதனும்

(வியஸ்ஸார்.)



நமது இந்திய சரித்திரத்திலேயே மறக்க முடியாத சம்பவம் எனும்படி சமீபத்தில் மஹாத்மா காந்தியடிகள் உண்ணா விரத மிருந்தார். இயேசுநாதன் அன்று மனித வர்க்கத்தின் பாபமூட்டைகளை யெல்லாம் தான் ஏற்றுக்கொள்ள முன் வந்தார். இன்று அதே தியாக உணர்ச்சியை மஹாத்மா காந்தியடிகளின் உண்ணாவிரத தவத்திலே காண்கிறோம். உலகம் செய்யும் பாவங்களை யெல்லாம் ஆத்ம தியாகமாகத்தான் ஏற்று உட்கொள்ளும் உண்ணா விரதம் நம் தமிழர்களிடையே பழங்காலந் தொட்டு வரும் ஒரு பிராயச்சித்தம். உள்ளம் உண்மையாகவே கரையுமானால், அதன் பிரவாகம் கணக்கிடற் கரியது. உலகத்தின் உள்ளங்களை யெல்லாம் அது கரைத்து விடும். இதை நேர் தரிசனமாக நாம் கண்டோம். மனிதன் தெய்வமாகத் தானே உண்டாக்கிக் கொள்ளுகிறான் என்பது நிரூபித்துக் காட்டப்பட்டது.

இவ்வித ஆத்மீக அடிப்படை தமிழர்களிடையே முன் காலத்திலும் நிகழ்ந்தது என்று குறிப்பிட்டேன். சேரமான் பெருஞ்சேரலாதன் என்பவன் ஒரு பெரும் சேரமன்னன். அவன் சோழ மன்னன் பெருவளத்தானோடு போர் புரிய நேரிட்டது. அப்போரிலே சேரன் தோற்றான். அதோடு முதுகிலே காய மேற்பட்டது. முதுகிலே காய மேற்படுவது க்ஷத்திரியனுக்கு மிகவும் அவமானமான காரியம். இந்த அவமானத்தைப் போக்க அவன் உண்ணா விரத மிருந்து மாண்டான். அதை "வடக்கிருத்தல்" என்று தமிழர் கூறி வந்தனர்.

அவன் உண்ணா விரத மிருக்கவே நாடெங்கும் சோகம் ததும்பியது. மிருதங்கம் முதலிய வாத்தியங்களும் யாழும் தங்கள் இனிய பண்ணை மறந்து சோர்ந்தன. தெய்வீகக் குறியான பசுவின் நெய் சட்டியினின்றும் கவிழ்ந்தது. தேன் வண்டுகள் தங்கள் ரீங்காரத்தை மறந்தன. உழவர்கள் தங்கள் பள்ளுப்பாட்டை மறந்தனர். பெரிய க்ஷேத்திரங்களிலும், நகரங்களிலும் திருவிழாக்கள் நின்று விட்டது. நாடெங்கும் துக்கமும், சோகமும் ததும்பியிருந்தது.

இச் சம்பவத்தை கழாத்தலையார் என்னும் தமிழ்ப் புலவர் புறநானூற்றுப்பாட்டு ஒன்றில் குறிப்பிடுகிறார்.

> "புறப்புண் நாணி மறத்தகை மன்னன்
> வாள் வடக் கிருந்தனன்."

அப்போது நாட்டில் என்ன நடந்தது என்பதைப் புலவர்,

"மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப
விருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்பச்
சுரும்பார் தேறல் சுற்ற மறப்ப
உழவர் ஓதை மறப்ப விழவு
மகலுளாங்கட் சீறூர் மறப்ப."

என்று வருணிக்கிறார்.

சேரலாதனின் நோக்கத்திற்கும் மகாத்மா காந்தி யடிகளின் நோக்கத்திற்கும் நிறைந்த வித்தியாச முண்டு என்பது என் எண்ணம். குற்றம் செய்வது மனிதனின் இயற்கை. சேரன் தோற்று புறமுதுகிட்டுக் காயப்பட்டான். அதனால் அதைரியமுற்று உண்ணாவிரத மிருந்து மாண்டான். தன் அவமானத்தை நீக்க அவன் அவ்வாறு செய்தது அவ்வளவு பொருத்தமன்று. உலகம் "என்னைக் குற்றவாளி அல்லது நிரபராதி என்று சொல்லட்டும்" என்பது மஹாத்மா காந்தி யடிகளின் கேள்வி. உலகம் "நீ குற்றவாளி" யென்றால் அதை அவர் மறுக்க எப்போதும் வந்ததில்லை. "அப்படியே" என்று ஒத்துக் கொள்ளுகிறார். தன் எதிரிகள் செய்யும் குற்றங்களையும் தான் ஏற்றுக்கொண்டு அதற்குத் தான் பிராயச்சித்தம் செய்து கொள்ளுகிறார். தன் சதையையே சிதைத்துக் கொள்ளுகிறார். அப்போது தன் உள்ளத்தை அகண்ட வெளியாக விரித்து விடுகிறார். அப்போது இவ்வுலகம் அவ்வகண்ட உள்ளத்தின் வெளியிலே ஒரு சிறு துரும்பு.

அவமான மென்பதை அவர் பொறுமையுடன் ஏற்கிறார். அதற்காக உயிரை விட்டு மறைக்க அவர் எண்ணவில்லை. தன் ஆத்மீகத்தின் முன் உயிர் எம்மாத்திரம்! தன் உயிரின் மேம்பட்ட ஆத்மீக அந்தரத்தில் தானிருந்து எல்லாவற்றிற்கும் பிராயச்சித்தம் தேடுகிறார். சேரலாதனின் உள்ளப்பரப்பு இதனிலும் சற்று குறுகியது தான். தன் மானங் காக்க தன் உயிரை, அதற்குச் சமமென் றெண்ணி—மானம் போனபோது, உயிரையும் விடுகிறான். காந்தியடிகள் உயிரை அதற்குச் சமமென் றெண்ணவில்லை. அதனிலும் பெரிய அந்தராத்மத் தியாகம் செய்கிறார். இதை விளக்குவது மிகவும் கடினம். ஆயினும் இவ்விருவரும் கைக்கொண்ட ஆயுதம் ஒரு தன்மைத்தே. பெருமை மிக்க உண்ணா விரதத்தின் தன்மையை அவ்வாறு நோக்கும்போது அவ்வளவு அகண்டமாகத் தோற்றுகிறது. அவ்வகண்டத்தை- அரசாங்கமோ, உலகத்திலுள்ள வேறு ஒரு பெரிய சக்தியோ கட்டுப்படுத்த முடியாது. ஈசன் எங்கெங்கு உள்ளானோ அங்கெல்லாம் அது விரியும். பழமையைப் புதுமைப்படுத்துவதில் காந்தியடிகள் முதன்மையானவர் என்பது தெளிவாகும்.

[புறப்புண்-முதுகில் காயம்; வாள் வடக்கிருத்தல்—உண்ணா விரத மிருத்தல், மண்-பண்; முழா-மிருதங்கம்; இழுது-நெய்; ஓதை-பள்ளுப்பாட்டு.]

# தமிழ்த் தாய்க்கு

(ம. ரா. போ. குருசாமி)



நின்னருமை யாரறிய நினைவுண்டோ இலையோ
  நின்மைந்தன் எனுமுரிமை எனக்குண்டோ இலையோ
என்னருமைத் தமிழ்த்தாயே ஏங்கியுள மைந்தன் ... 4
  எளிமையினைப் போக்கிடுவாய் எங்கும்புகழ் பரந்தோய்
உன்னரிய கலைப்பெருக்கின் ஒளிநிலவின் ஒருசார்
  ஒதுங்கிநான் இருப்பதற்கே உன்னுவையென் தாயே
இன்னுமென்றன் தாய்க்குழுவில் இல்லாத பாவம்
  எனக்கெதற்கோ என்தாயே ஏற்றருளாய் உயிரே. 1

கார்மேகத் திடைவளையும் கதிர்மின்னின் இனிமை யானாய்
கார்த்திரையின் கட்லுதிக்கும் கதிரவனின் களைநீ யானாய்
ஏர்மிகுத்த நிலவொளியும் எந்தாயே நீயே யானாய்
பார்மிகுத்த பரப்பினிமைப் பயனெல்லாம் தமிழே நீயே. 2

நீலத்தி ரைக்கடல் ஓரத்திலே—நீந்தும்
  திங்களின் வெண்கதிர் தன்னினிமை
கோலப்பெ ருவெளி வானத்திலே—கொள்ளை
  கொண்டிடும் தண்ணில வின்னினிமை
சாலமி குத்திடும் மீன்களிடை—ஒளிர்
  சந்திரன் தந்திடும் நல்லினிமை
மேலாமிவ் வித்தனை இன்பத்திலும்—மேலாய்
  மேவி விளங்குவள் செந்தமிழாள். 3

என்றுமுள தென்தமிழே எங்களுயிர் இறையே
  எங்களுயிர் காத்தருளும் எம்மரிய தாயே
ஒன்றுமிலை தமிழர்க்குன் னிலும் மிகுத்த
  உயர்பொருளாய் இலகுவதே எங்கெங்குந் தாயே
என்றுமுன்றன் திருவடிக்கே ஏலும்புகழ் கூறார்
  எனினவர்கள் எவரெனினும் எங்கட்கு வேண்டாம்
வென்றுதமிழ்க் கொடியினையே உயர்த்திடவே தமிழன்
  வீறுகொள வீரமருள் வீரத்தமிழ்த் தாயே. 4

எத்திசை யும்புகழ் வெற்றிகொ ளும்முர
  செற்றி யெறிந்திடவே
முத்தமி ழும்முணர் முற்றறி வின்னொரு
  நற்றமி ழன்வரவே
எத்தின மும்பிறர் மெச்சி யறிந்திடும்
  செந்தமி ழின்இறையை
மெய்த்திற மேபுகழ்ந் தேத்திடு வோம்வரம்
  பெற்றிடு வோம்வருக! 5

மங்கையொரு பங்கன்குற மங்கையினை நாடும்
நங்கடம்ப மயிலோனும் சங்கமதை நாடிச்
சங்கையறச் செந்தமிழைச் சார்ந்துபடித் திட்டால்
எங்குள்ளரெந் தமிழ்க்கலையின் எல்லையினைக் காண்பார். 6

---

குறிப்பு:—ஒவ்வொரு பாடலும் வெவ்வேறு வகை யிசையினது.

# ஊரடங்கும் சட்டம்

(கு. ராஜாராம்)

சென்ற ஆகஸ்டு மாதத்தில், தலைவர்களைச் சிறையிட்டபின் இந்தியா முழுவதிலும் ஜனங்கள் சர்க்காருக்கு விரோதமாகக் கிளம்பி, தபாலாபீஸ்களுக்கும், சர்க்கார் ஆபீஸ்களுக்கும், ரயில் தண்டவாளங்களுக்கும், தீமூட்டியோ, தகர்த்தோ, இன்னும் பலவிதமாகவோ தீங்கிழைத்த போது, சில பெரிய நகரங்களில் ஊரடங்கும் சட்டம் அமுலுக்கு வந்ததை நேயர்கள் அறிவார்கள்.

ஊரடங்கும் சட்டப்படி இரவிலே (பொதுவாக இரவில்தான்) எவரும் தம் இல்லம் விட்டு வெளியே வந்து தெருவில் நடமாடக்கூடாது. மீறி வெளி வருவோர் கடுமையான தண்டனைக்குள்ளாவர். சமீபத்தில், நம் நாட்டில் இச்சட்டத்தை மீறிய சிலர் சுட்டுக் கொல்லப் பட்டனர்.

இங்கிலாந்தில் இந்த ஊரடங்கும் சட்டம், வெகு நாளைக்குமுன், சமாதான காலத்திலும்கூட அமுலில் இருந்து வந்திருக்கிற தென்பது இங்கிலாந்து தேச சரித்திரத்தின் மூலம் தெரிய வருகிறது. **நார்மானியர்கள் (Normans)** இங்கிலாந்தில் ஆட்சி புரிந்து வந்த காலத்தில் தற்காலத்தைப்போல் காலங் காட்ட கடிகாரங்கள் இல்லை. அதனால் மக்கள் ஏதாவது செய்ய வேண்டுமானால், மணி அடித்து அறிவிக்கப்பட்டு வந்தது.

குளிர்காலத்தில் அங்கு தினசரி இரவு 8-மணிக்கு ஒவ்வொரு நகரத்திலும், கிராமத்திலும் மணி அடிக்கப்படும். இதற்கு **ஊரடங்கு மணி (Curfew Bell)** என்று பெயர். மணியடிக்கும் சப்தம் கேட்டதன்பின் யாரும் வெளியே வரக்கூடாது. வீடுகளில் விளக்கு வெளிச்சம் எதுவும் இருக்கப் படாது: குளிர்காய நெருப்புப் போட்டிருந்தாலும் அணைக்கப்படவேண்டும். எல்லோரும் தம் வீட்டுக் கதவுகளை மூடிவிட்டுப் படுக்கச் செல்ல வேண்டும்.

அந்நாட்களில் ஊரடங்கும் சட்டம் இரண்டு காரணங்களுக்காக அமுலில் இருந்து வந்தது. முதலாவது: அக்காலத்தில் இங்கிலாந்திலுள்ள வீடுகளெல்லாம், தற்பொழுதுபோல் செங்கல், கல் இவற்றினால் ஆகியவை அல்ல. ஆனால் மரங்களைக் கொண்டு கட்டப்பட்டவை. ஆதலால் அவை இலகுவில் தீப்பற்றிக் கொண்டு எரிய ஏதுவாகும். ஆபத்தைத் தவிர்ப்பதற்காக முன்னெச்சரிக்கையுடன் நெருப்பை அணைத்து விடுவது அவசியமாகும்.

இரண்டாவது காரணம்: அந்நாளில் இப்பொழுதுபோல் பாதுகாப்பிற்காக போலீஸ் போன்ற ஏற்பாடுகள் எதுவுமில்லை. ஆதலால் இருட்டில் வெளியேறுவது ஆபத்தான காரியமாகும். தேசத்தில் திருட்டு முதலிய அபாயங்களைக் கூடிய மட்டில் குறைக்க முடியும்.

**வில்லியம் (William the Conqueror)** இங்கிலாந்தை ஜயித்து, ஆண்டு வந்த காலத்தில், இந்த ஊரங்கும் சட்டம் தேசமுழுவதும் அமுலிலிருந்தது. அவன் நார்மானியனதலால், ஆங்கில மக்கள் இரவு நேரங்களில் கூடிக் கூட்டம் போட்டுத் தனக்கு எதிராகக் கிளம்பக் கூடும் என்று எதிர்பார்த்தான். அப்படி எவரும் கிளம்பா வண்ணம் செய்வதற்காகத்தான் மிக முக்கியமாக இச்சட்டத்தை அமுலில் வைத்தான். சட்டத்தை மீறினவர்களைக் கடுமையாகத் தண்டிப்பதாகவும் அறிவித்தான்.

செர்ட்ஸ்லி மாதாகோவிலில் (Chertsly Abbey) ஊரடங்கு மணி ஒன்று இருந்தது. **வார்விக்கின் (Warwick the King Maker)** உறவினனான நெவில்

# ஆர்தர் அரசர் அந்திய காலம்

(தா. மா. அப்பாவு)

அன்று நிலவு வெள்ளிய கிரணங்களைக் கண்ணீரென சிந்திக் கொண்டிருந்தது. எதையோ பார்த்து மருண்டதுபோல் அடிக்கடி மேகக் கூட்டங்களுக்குள் சென்று மறைந்து கொள்ளுகிறது. அதற்கும் எத்தனையோ துக்கங்கள். அகண்ட ஏரி யொன்று நிலவொளியிலே தெரிகிறது. அதனில் அலைகள் சீறியெழுந்து கூச்சலிடுகின்றன. கரையிலுள்ள செடிகள் அசைந்தாடி ஒப்பாரி வைக்கின்றன. 'விர், விர்' என்று காற்று அதற்குப் பின்னணி பாடுகிறது. கருவண்டுகள் 'ஞொய், ஞொய்' என ஏளனம் செய்து விட்டுப் போகின்றன. சந்திரன் மேகங்களிலிருந்து எட்டிப் பார்க்கிறான். அதன் ஒளியில் தூரத்தில் ஓர் இடிந்த கோவில் தென்படுகிறது. அருகில் சென்று பார்ப்போம். ஒரு காலத்தில் அநேக மக்களின் காலடி பட்ட அதன் வாசலில் இப்போது புல் முளைத்திருக்கிறது. அநேக மக்களின் துதிக்கும் ஒலி கேட்ட அவ்விடத்தில் இப்போது ஆந்தைகளும் குருவிகளும் கூச்சலிடுகின்றன. பாழடைந்த வெளிச் சுவர்களைத் தாண்டிச் சென்றால் உடைந்த சிலுவையோடு கூடிய ஒரு கட்டிடம் தென்படுகிறது. அதன் கூரையை எப்போதோ வாயுபகவான் தன்னுடன் எடுத்துச் சென்று விட்டான். இக்கோவிலின் குழி கண்டு, புழுதிபடிந்த தரையிலே இங்கிலாந்தின் 'மகுடபதி' ஆர்தர் படுத்திருக்கிறான். ஏரிக்கரையிலிருந்த மைதானத்திலே நடந்த அன்றையப் போரிலே தோற்று, தலையிலே பெரிய காயத்துடன் படுத்திருக்கிறான். அவனுடைய பக்கத்திலே 'பெடிவிர்' என்ற அவனது போர்வீரன் உறுபணி செய்து கொண்டிருக்கிறான்.

காவல் சூழ்ந்த பெரிய வீட்டிலே அழகிய மஞ்சத்தின்மீது பஞ்சணையில் படுத்துறங்கும் அரசன் இன்று வனாந்தரத்தின் மத்தியிலே இடிந்த கோவிலுக்குள்ளே புழுதிபடிந்த தரையிலே படுத்திருக்கிறான். அன்று பொன் நக்ஷத்திரங்கள் அலங்கரித்த கூரையின் கீழே இருந்தவன் இன்று வெண்

---

(Neville) என்பான் அந்த ஊரடங்கு மணி அடித்ததும் தூக்கிலிடப்பட வேண்டும் என்று அரசன் ஆக்ஞாபித்திருந்தான். அவனைக் காப்பதற்காக அவனது காதலியான பிளாஞ்ச் ஹரியட் (Blanche Heriot) என்பவள், மணிக்கூண்டிலேறி, அன்று ஊரடங்கு மணி அடிக்கக்கூடாது என்ற தீர்மானத்துடன் அம் மணியின் நாக்கை இறுகப் பிடித்துக் கொண்டாள் என்று ஒரு கதை வழங்கி வந்தது.

லாங்பெல்லோ (Longfellow) என்னும் கவிஞர், ஊரடங்கு மணி அடித்த பின் ஊரிருக்கும் நிலைமையை ஒரு சிறு கவியில் சித்திரித்திருக்கிறார். அதன் சாரத்தைக் கூறி, இக்கட்டுரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

"ஊரடங்கு மணி ஓசையிட ஆரம்பித்து விட்டது. நெருப்பை அணையுங்கள்: விளக்குகளை அணையுங்கள். பொழுது புலர்ந்த பின்னர்தான் வேலை செய்ய வேண்டும். இரவெல்லாம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்."

"சாளரங்களில் இருள் படர்ந்திருக்கிறது. நெருப்பு அணைக்கப்பட்டு, வெளிச்சமென்பதே இல்லாமலிருக்கிறது. சத்தம் ஓய்ந்து அமைதி நிலவுகிறது. நடமாட்டம் எல்லாம் நின்று விட்டது. மாளிகைகளில் சத்தம் ஏதுவுமில்லை. கூடங்களிலும் ஓசை இல்லை. அயர்ச்சியும், தூக்கமும் எல்லோரையும் ஆட்சி புரிகின்றன."

நக்ஷத்திரங்கள் பதித்த ஆகாயத்தைக் கூரையாகப் பெற்றிருக்கிறான். அன்று துல்லிய ஆடையணிந்த மெல்லிய பூங்கோதையர் சரசமாடப் படுத்திருந்த அரசனை இன்று பல்லிகளும் பூச்சிகளும் தேடி வருகின்றன. அன்று ஜ்வலிக்கும் விளக்குகள் இவனுக்கு ஒளி தந்தன. இன்று கூரைவழியாய் வரும் சந்திரகிரணம் தான் ஆதரவு. அன்று உடலுக்கு ஏதாவது சிறுநலிவு ஏற்பட்டாலும் நூற்றுக் கணக்கான மருத்துவர் இவனைச் சூழ்ந்து கொள்வர். இன்றோ இறக்கும் நிலையில் உள்ள இவனைக் கவனிக்க 'பெடிவிர்' என்ற போர்வீரன் மட்டும் தான். அன்று இன்னிசை கானம் கேட்ட காதுகளில் இன்று கோட்டானின் கூச்சலும் ஆந்தையின் அலறலும் கேட்கின்றன. ஐயோ, ஈதென்ன விந்தை? இது தான் உலகின் இயல்பு போலும்.

ஆர்தர் சொல்லுகிறான்: "இன்றையப் போரில் என் உண்மையுள்ள போர் வீரர் அனைவரையும் இழந்து விட்டேன். எதிர்கால வீரச் செயல்களைக் கேட்க நான் உயிருடன் இருக்கப் போவதில்லை. நான் மீண்டும் அரசனாக வருவேன் என்று சோதிடனொருவன் சொல்லி யிருக்கிறான். எனக்கு அதில் நம்பிக்கையில்லை. என்ன நடக்கிறதோ நடக்கட்டும். என்னுடைய தலையிலே பலத்த காயம் பட்டிருக்கிறது. நான் காலை வரை உயிருடன் இருக்க முடியாது. இதோ இந்த வாளை எடுத்துச் செல். உனக்குத் தெரியும், வேனிற் காலத்தில் ஒரு நாள் ஏரியின் மத்தியிலிருந்த ஓர் கை இந்த வாளை எனக்குத் தந்தது. இதுநாள்வரை எனக்கு வெற்றியைத் தந்து வந்தது இந்த வாள். இதன் செயல்கள் எதிர்கால சரித்திரத்தில் இடம் பெறும். இதை எடுத்துச்சென்று ஏரியில் எறிந்துவிடு. என்ன நடக்கிறதென்பதை வந்து சொல்."

'சரி' என்று சொல்லிவிட்டு பெடிவிர் நடக்கிறான். பெரிய மனிதர்கள் வீரர்கள் புதைக்கப்பட்ட உடைந்த சமாதிகளின் வழியாக நடந்து செல்லுகிறான். குளிர்ந்த காற்று 'சில்' லென வீசுகிறது. பருக்கைக்கற்கள் காலிலே குத்துகின்றன. இவை எதையும் பொருட் படுத்தாமல் ஏரிக் கரைக்கு வந்து சேருகிறான். ஏரியில் எறிவதற்காக வாளை உறையிலிருந்து உருவுகிறான். அப்போதுதான் மேகக் கூட்டங்களிலிருந்து வெளிவந்த சந்திரனின் ஒளி வாளின்மீது பாய்கிறது. பலவித ரத்தினங்களாலான அதன் கைப்பிடி 'தகதக' வென ஜ்வலிக்கிறது. பெடிவிர் அதனையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருக்கிறான். அதன் ஒளியில் உள்ளத்தைப் பறிகொடுக்கிறான். எறிவதா வேண்டாமா என்று அவன் மனம் இருபுறமும் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. கடைசியாக அவ் வாளை எங்காவது ஒளித்து வைப்பதென முடிவு செய்கிறான். நாணற் புதரிலே அதனை மறைத்துவிட்டு ஆர்தரிடம் செல்லுகிறான்.

"என்ன நடந்தது?" என்று ஆவலுடன் கேட்கிறான் ஆர்தர். ஏதாவது தெய்வீகச் செயல் நடந்திருக்குமென அவன் நம்பினான். "அலைகளின் ஆவென்ற அலறலும் காற்றின் கடூர ஒலியும் தான் நான் கேட்டது" என்று பதிலிறுக்கிறான் பெடிவிர்.

தளர்ந்த மனத்துடன் ஆர்தர் :—நீ உன்னுடைய நல்ல பெயரை நாசமாக்கிக் கொள்ளுகிறாய். பொய் பேசுவது சுத்த வீரனுக்கு அழகல்ல. பொய் பேச மனிதர்கள் வெட்கப்பட வேண்டும். நீ நான் சொன்னபடி செய்திருந்தால் ஏதாவது புதுமையான செயலைக் கண்டிருப்பாய். அல்லது அசாதாரணமான ஒலியைக் கேட்டிருப்பாய். என்னுடைய உண்மையுள்ள நண்பனே! திரும்பிச் சென்று நான் சொன்னபடி செய்து வா.

இரண்டாவது முறையாக பெடிவிர் செல்லுகிறான். ஏரிக்கரையிலே நாணற் புதரிலிருந்து வாளை யெடுக்கும்போது திரும்பவும் அவன் மனம் சோதனைக் குள்ளாகிறது. அவன் மனத்திலே எண்ணச்சுழல் ஓடுகிறது "இந்த வாளை நான் எறிந்து விட்டால் உலகம் ஓர் உயர்ந்த பொருளை இழந்து விடும். எத்தனையோ மனிதர்களின் குதூகலத்திற்குப் பாத்திரமான இந்த வாளை எறிந்து விடுவதால் என்ன பயன் ஏற்படப் போகிறது? அரசன் உத்தரவை மீறுவது குற்றந்தான்—ஆனால் அரசனே தன்னிலையில் இல்லாத போது? ஆர்தர் அரசனுக்காக கடலரசியால் ஏழாண்டுகளில் தயாரிக்கப் பட்ட இந்த வாள் என்றும் இவ்வுலகில் இருந்து அவன் புகழை உலகுக்குப் புகட்டட்டும்." இவ்வாறு அறிவு மயங்கியவனாய் மறுமுறையும் வாளை யொளித்து வைத்துவிட்டு ஆர்தரிடம் செல்லுகிறான்.

பெரு மூச்சு வாங்க ஆர்தர் :—என்ன கண்டாய்? என்ன கண்டாய்?

பெடிவிர் :—அலைகள் ஆரவாரித்தன. காற்று கூவிற்று.

இதைக்கேட்ட ஆர்தருக்குக் கோபம் பொங்கி யெழுந்தது. "நன்றி கெட்டவனே, நல்லெண்ண மில்லாதவனே. இறந்து போகும் அரசன் பேச்சுக்கு மதிப்பில்லை. அவன் ஒவ்வொரு சொல்லும் சட்டமான ஒரு காலம் இருந்தது. என்னுடைய ஊழியர்கள் எல்லாம் இறந்து விட்டனர். நீ உண்மையுள்ளவனாய் இருப்பாய் என்று எண்ணினேன். விலைமதிப்புள்ள வாளுக்காக என்னை ஏமாற்றத் துணிந்தாய். ஒளிவிடும் பொன்னுக்காக சிறு பெண்ணைப் போன்று மதியிழந்தாய். ஆனால் மனிதர்கள் தங்கள் கடமை யைச் செய்வதற்காக இருமுறை தவறுதல் உண்டு. மூன்றாந்தரம் திருந்தி விடுவர். உடனே நீ செல். மீண்டும் நீ அவ்வாளைத் திருட முயற்சித்தால் என்னுடைய கைகளாலேயே உன்னைக் கொன்று விடுவேன்."

அவசரமாக எழுந்த பெடிவிர் வழியிலிருந்த இடையூறுகளை யெல்லாம் தாண்டிக் கொண்டு ஓடுகிறான். நாணற் புதரை யடைந்ததும் வாளைத்தாவி எடுத்து தலையைச்சுற்றி வீசி எறிகிறான். நில வொளியை 'பளிச் பளிச்' என பிரதிபலித்து மின்னிக்கொண்டே அந்த வாள் சுழன்று சென்றது. மேல் நோக்கி சிறிது தூரம் சென்று பின்னர் வளைந்து சென்று தண்ணீரைத் தொடுவதற்கு முன்னே வெள்ளாடையுடுத்த புதுமையான கையொன்று நீரினின்று மேலெழும்பி அவ்வாளைப் பிடித்து மும்முறை சுற்றி உள்ளே இழுத்துக் கொண்டது. மனப்பாரம் நீங்கிய பெடிவிர் ஆர்தரிடம் சென்றான்.

மேல் மூச்சு வாங்க ஆர்தர் கூறுகிறான், "நீ உன் கடமையை நிறை வேற்றி விட்டாயென உன் கண்கள் தெரிவிக்கின்றன. என்ன கண்டாய் என்பதைச் சீக்கிரம் சொல்."

தைரிய முள்ள பெடிவிர் :—நான் என் கண்களை இறுக மூடிக்கொண் டேன். இல்லாவிட்டால் நான் இனிமேல் பார்க்க முடியாத அந்த இரத்தினக் கைப்பிடி என் கண்களைக் குருடாக்கி என் கடமையைத் தடை செய்திருக் கும். அம்மாதிரியான இரத்தினங்களை இனி நான் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்திருந்தாலும் மீண்டும் பார்க்கப் போவதில்லை. அந்த வாளை என் கைகளின் பலங்கொண்ட மட்டும் வீசி எறிந்தேன். பின்னர் கண் திறந்து பார்த்தபோது ஓர் புதுமையான கை அதன் கைப்பிடியைப் பிடித்துக்கொண்டு தண்ணீரில் மறைந்தது."

மூச்சு விடக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஆர்தர் கடைசியாகக் கூறி னான். "என் அந்திய காலம் சமீபித்து விட்டது. இன்னும் சிறிது நேரத்தில் நான் இறந்து போகப் போகிறேன். உன் தோளின் மீது என்னைத் தூக்கிக்

கொண்டு ஏரிக்கரைக்கு எடுத்துச் செல். என் உடல் சில்லிட்டு விட்டது-நான் இறந்து விடுவேன்."

கோவில் தரையிலிருந்து பாதி எழுந்த ஆர்தரை பெடிவிர் கைகளில் தாங்கிக் கொண்டான். ஆர்தரின் கண்கள் பரக்கத் திறந்திருந்தன. பெடிவிரின் கண்களினின்று நீர்த்தாரைகள் வந்து கொண்டிருந்தன. அவன் பேச முயற்சித்தான். பேச வார்த்தைகள் கிடைக்கவில்லை. மண்டியிட்டு அரசனைத் தோளில் தூக்கிக்கொண்டு சமாதிகளின் வழியாய் வெளியே வந்தான். ஆர்தர் கிலிபிடித்த மனிதனைப்போல 'சீக்கிரம், சீக்கிரம்' என்று பெடிவிரின் காதுகளில் சொல்லிக்கொண் டிருந்தான். அவனுடைய உயிர் கொஞ்சம் கொஞ்சமாய் விலகிக்கொண் டிருந்தது. அவர்களைச் சுற்றி உலகம் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தது. அவனது எண்ணங்கள் அவனை வேகமாய்ச் செல்லத்தூண்டின. சில்லிட்ட காற்று அவன் காதுகளை உராய்ந்து சென்றது. பனித்துண்டங்களும் பருக்கைக் கற்களும் அவன் கால்களை விறைக்கச் செய்தன. அவனைச் சுற்றி கரிய பெரிய குன்றுகள் சிதறிக் கிடந்தன. அவன் காலில் அணிந்திருந்த செருப்புகள் 'சறுக் சறுக்' என்று சப்த மிட்டுக் கொண்டிருந்தன. அவன் ஏரிக் கரைக்கு வந்து சேர்ந்து விட்டான்.

கரையிலே ஓர் படகு காத்திருந்தது. அதன் அடிமுதல் நுனிவரை கரிய நிறம் தீட்டப் பட்டிருந்தது. அப்படகிலிருந்த ஒவ்வொரு பொருளின் நிறமும் கறுப்பு. பொன்முடி தாங்கிய மூன்று ராணிகள் கரிய உடை உடுத்துக் கொண்டு அதில் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் அழுது கொண்டிருந்தனர். அந்த ஓசை ஆகாயத்தை ஊடுருவிச் சென்று நக்ஷத்திரங்களில் பிரதிபலித்தது. மனித சஞ்சார மற்ற இடத்திலுள்ள காற்றின் ஓசையை யொத்திருந்தது அவர்கள் வருத்தத்துடன் அழுதுகொண்டிருந்த குரல்.

ஆர்தர் முணகுகிறான், "என்னை அந்தப் படகில் வை." ஆர்தர் அருகில் வந்தவுடன் அவர்கள் எழுந்து அவனைத் தங்கள் கைகளில் வாங்கிக் கொண்டனர். அவர்களில் அழகாகவும் உயரமாகவும் இருந்த ஒருத்தி தன் மடிமீது அவன் தலையை வைத்துக்கொண்டு, அவனைப் பேரிட்டழைத்து, ஆடைகளைத் தளர்த்திவிட்டு அழலானாள். அவளது கண்ணீர் சந்திர ஒளியில் தெரிந்த வெளுத்துப்போன அவன் முகத்தில் களங்கம் உண்டாக்கிற்று.

அப்போது உதிக்கும் சூரியனின் முதற் கிரணங்கள் சந்திர ஒளியை மங்கச் செய்தன. உதிக்கும் சூரியனைப் போன்றிருந்த ஆர்தரின் நெற்றியில் சுருண்டிருந்த தலை மயிரிலும் கைகால்களின் மேலும் இரத்தம் படிந்திருந்தது நன்குகப் புலப்பட்டது. படகிலே தலையை உயர்த்தி வைத்துப் படுத்திருந்த அவன் மேலெல்லாம் புழுதி படர்ந்திருந்தது. சரியாக வாரி விடப் படாத மயிர்த் திரள்கள் முகத்தின் மேல் இரத்தத்தால் ஒட்டப்பட் டிருந்தன. கையிலே உருவிய வாளுடன் யுத்த சன்னத்தனை துடித்துக் கொண்டிருக்கும் ஆர்தருக்கும் இவனுக்கும் எத்தனை வேற்றுமை!

அப்போது பெடிவிர் பலமாகக் கூவுகிறான், "என் தலைவனே! நான் இனி என்ன செய்வது? எனது தலையை மறைத்துக்கொள்ளும் இடமெது? என் கண்கள் எதைக் கண்டு களிப்புறப் போகின்றன? தினமொரு வீரச் செயல் செய்யும் வீரனை யுண்டாக்கிய வீரமும் உண்மையும் நிறைந்த காலம் போய்விட்டது. புகழ்தரும் வீரர்கள் வாழ்ந்த காலம் இத்துடன் முடிவடைகின்றது. உலகிலேயே வலிமை மிக்க ஓர் அரசின் சின்னமாக இருந்த வட்டமேஜை (ஓர் அரசாங்க முறை) அழிந்து விட்டது. மீந்த நான் மட்டும் நண்பனில்லாதவனாய் இருண்ட நாட்கள் என்னைச் சூழ்ந்து வர

வேற்றுக்கொள்கை கொண்ட மனிதர்களின் புதிய முகங்களுக் கெதிரிலே செல்லுகிறேன்.''

படகி லிருந்தபடியே மெதுவாக ஆர்தர் பதில் சொன்னன், "பழய வழக்கங்கள் புதிய வழக்கங்களுக்கு இடந் தந்துவிட்டு மறைந்து விடுகின்றன. அவ்வாறே கொள்கைகளும். கடவுளும் இதைக் கண்டு திருப்தி யடைகிருர். இல்லாவிடின் ஒரே வழக்கமும் கொள்கையும் உலகைத் துன்புறுத்தும். மக்கள் அதில் வெறுப்புக் கொள்வர். உன்னைப் புதிய உலகிற்குப் பழக்கிக் கொள். இல்லாவிடில் நீ வெற்றி யடைய மாட்டாய். இன்னும் நான் சொல்ல வேண்டியதென்ன இருக்கிறது? உலகம் புரக்கும் கடவுள், நான் என் வாழ்க்கையில் செய்த நலன்களை ஏற்றுக்கொண்டு குற்றங்களை மன்னித்து என்னைப் பரிசுத்தமானவ ளுக்குவாராக. என்னை இனிமேல் நீ பார்க்க முடியாது. என்மேல் உனக்கு உள்ள அன்பனைத்தையும் ஜபத்தின் மூலம் வெளியிடு. **மனிதர்கள் கனவு காணுவதைவிட அதிகமான நலன்களை ஜபம் செய்வதின் மூலம் பெற முடியும்.** இரவும் பகலும் எனக்காக நீ ஜபம் செய்துகொண்டு இரு. தம் சிற்றறிவைக் கொண்டு அஞ்ஞான இருளில் திரியும் மனிதர்கள் ஆடுகளை விட எந்த வகையில் மேன்மையானவர்கள்? அவர்கள் கடவுளை உணர்ந்தாலும் அவரைத் தம் சுயநலத்துக்காகவே பயன்படுத்த முயலுகின்றனர். **உலக மனைத்தும் பக்தி என்னும் பொற்சங்கலியால் கடவுளின் பாதங்களில் கட்டப்பட்டிருக்கிறது.** நான் போய் வருகிறேன், என் அறிவு சந்தேகங்களால் குழப்பப்பட்டிருக்கிறது. நான் நீ காணும் இவர்களுடன் நெடுந் தொலைவிலுள்ள நிலையான பேரின்ப உலகிற்குச் செல்லுகிறேன். அங்கு மழை பெய்யாது; பனி விழாது: சீதளம் இருக்காது. புயற்காற்று அங்கு வீசுவதில்லை. எங்கும் பசும்புற்றரைகள் நிறைந்த இன்பகரமான இடம். மனோகரமான வேனிற்காலத்து குளிர்ந்த வேளையிலே என் புண்களை ஆற்றிக்கொள்வேன்.''

அவ்வாறு அவன் சொன்னவுடன் துடுப்புகள் வலிக்க, படகு அன்னத்தைப்போல கரையை விட்டு நகர்ந்து, சுழி கடந்து நீரைக் கிழித்துக்கொண்டு வெண்நுரையை உண்டாக்கிக்கொண்டு வேகமாய்ச் செல்லுகிறது. தண்ணீர் வட்டம் வட்டமாய் அலைவிடுகிறது. எங்கோ இருந்து நாதம் பிறந்து நீர்மேலே படிந்து செல்லுகிறது. நீரிலுள்ள புஷ்பங்கள் மலருகின்றன. தேன் சிந்துகிறது. ரீங்காரம் செய்துகொண்டு வரும் வண்டுகள் தேனைக் குடித்துவிட்டு ஒய்யாரமாகப் பறந்து செல்லுகின்றன. பறவைகள் சப்தமிட்டுக்கொண்டு கூட்டைவிட்டு வெளியே வருகின்றன.

பெடிவிர் கரைமேலே வெகுநேரம் நின்று கொண்டிருக்கிருன். அவனது கால்கள் உணர்ச்சியற்ற மரம்போல் விறைத்து நிற்கின்றன. அவனது கண்கள் படகையே பார்த்துக் கொண்டிருக்கின்றன. அதோ அந்தப் படகு கருத்த புள்ளிபோல் தோன்றுகிறது. சிறிது நேரத்திலே அதுவும் மறைந்து விடுகிறது. கதிரவனின் வெம்மை சான்ற கிரணங்கள் பெடிவிரின்மேல் படுகின்றன. அதை அவன் உணர்ந்து கொண்டதாகத் தெரியவில்லை.

[ஆங்கில மஹாகவியான டென்னிஸன் பிரபு எழுதிய 'ஆர்தரின் இறப்'பைத் தழுவி இக்கட்டுரை எழுதப்பட்டது. இதிலே ஓர் வீரம் மிக்க அரசனைப்பற்றியும் அவனது உண்மையுள்ள வீரனை (Knight)ப் பற்றியும் மிக அழகாக வார்த்தைகள் தொடுத்துள்ளார். 'பழையன கழிந்து புதியன புகுதல்' அவசியம் என்பதும் உணரப்படும். இவ்வுலக வாழ்வு இன்பமும் துன்பமும் நிறைந்தது என்பதை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிருர்.]

# செல்வத்துப் பயன்

(வை. இராஜாராம்)

செல்வம் என்னுஞ் சொல் அருட்செல்வம் செவிச்செல்வம் எனப் பல சொற்களொடு சேர்த்துக் கூறப்பட்டா லும் தனியாக நின்றவிடத்துப் பொருட் செல்வத்தையே உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் உணர்த்துவதாக வுள்ளது. அப்பொருட் செல்வந்தானும் இவ்வுலக வாழ்க்கைக்கு மிக இன்றி யமையாததாகவுள்ளது. அதன் இன்றியமையாமையை,

"அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்
இவ்வுலக மில்லாகி யாங்கு"

என்னும் வள்ளுவர் வாய்மொழி தெள்ளிதின் உணர்த்தும். அத் தகைய செல்வத்தை அறநெறியில் ஈட்டுதலே சாலச் சிறந்த தாகும். அதுவே அச்செல்வநிலை பேற்றிற்கும் அச்செல்வத் தாற் பெறும் பயனுக்கும் காரணமாகும். அவ்வாறு ஈட்டிய பொருளைப் பயனுணர்ந்து செலவழித்தல் வேண்டும். அப்பயன் யாதென ஆராய்வாம்.

உலகத்துப் பொருள் பெறுதலில் பயன் தான் மட்டும் நுகர்ந்து இன்பத்துடன் வாழ்வதன்று. "யாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் உயரிய நோக்கத்துடன் வாழ்ந்த வர் நம் முன்னோர். ஆகவே, செல்வம் பெற்றதின் பயன் தான் பெற்ற பொருளைத் தக்கார்க்கு ஈயு நெறியா லீந்து அவ ரின்புறத் தான் இன்புற்று வாழ்தலாம். அங்ஙனம் கொடுத்து வாழாதார் தம்பொருளை வறிதே வைத் திழப்பவ ரர்வர். இதனைத் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்,

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்"

என அறிவுறுத்தி யுள்ளார்.

கடைச்சங்கப் புலவரேறாகிய நக்கீரனார் இதனைக் காரணத் துடன் கூறும் தன்மை படித்து இன்புறத் தக்கதாகும்.

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி உடுப்பன இரண்டே
பிறவு மெல்லாம் ஓரொக்கும்மே, அதனால்
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே"

என்பதே அது. 'கடல்சூழ்ந்த உலகைப் பிறர்க்குரிமையின்றித் தனக்கே யுரியதாக ஆளும் அரசருக்கும் நள்ளிரவினும் பகலினும் தூங்காதவனாய் விலங்குகளை வேட்டையாடும் அறியாத வேட்டுவனுக்கும், உண்ணும் உணவு நாழி யளவினதே. உடுக்கும் ஆடைகள் இரண்டேயாம். மனைவி மக்கள் முதலிய பிறவாற்றான் வரும் இன்பமெல்லாம் இருவர்க்கும் ஒத்தனவேயாம். இவ்வாறு உலகெலாம் ஆளும் பெருஞ் செல்வனாய அரசனுக்கும் புலாலுண்ணும் கல்வியறிவிலா வேடனுக்கும் இன்பம் ஒரு தன்மையதேயாதலின், ஒருவன் செல்வம் பெற்றிருத்தலின் பயன் பிறர்க்கீதலாம். அங்ஙனம் ஈயாது ஒருவன் 'யாமே அனுபவிப்பேம்' என நுகர்வானேயானால், கள்வராலும் வினைசெய்வாராலும் பிறவாற்றாலும் சிதறிப்போவன பலவாம்" என்பது இதன் பொருள். இதனால் செல்வத்துப்பயன் பிறர்க்கீதலென்பதும் ஈயாதவிடத்து அப்பொருள் பலவாற்றான் அழியுமென்பதும் தெளிவாக விளங்குதல் காண்க.

ஒருவன் தனக்கு வரும்பொருளை நான்கு கூறுக்கி அவற்றுள் இரண்டனைத் தன் செலவாக்கி ஒன்றனை மேல் இடர் வந்தவிடத்து நீக்குதற் பொருட்டு வைப்பாக்கி மிகுந்த ஒன்றனையும் பிறர்க்கீதல் வேண்டும் என்பது தோன்ற, "வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்" எனப் பிறரும் கூறியுள்ளனர். இவ்வாற்றால் செல்வத்துப் பயன் ஈதல் என்பது தெற்றென விளங்கும். இனி யாருக்கு எவ்வாறு ஈதல் வேண்டும் என்பதையும் ஆராய்வாம்.

ஈகை யென்பது இன்னதெனக் கூறவந்த திருவள்ளுவரும், 'வறியார்க்கொன் றீவதே யீகை' எனப் பொதுப்படக் கூறியுள்ளார். அதற்குப் பரிமேலழகர் 'ஒருபொருளு மில்லாதார்க்கு அவர் வேண்டிய தொன்றைக் கொடுப்பதே பிறர்க்குக் கொடுத்தலாவது' என உரை எழுதிச் சென்றார். வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுக்கும் போதும் நாம் கொடுப்பது, 'இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்' ஆகுமா என ஓர்ந்து கொடுத்தல் வேண்டும். ஒருவன் சிறிது உணவு கேட்கின்றான் என வைத்துக் கொள்வோம். சிறிது உணவு கொடுத்தால் அவன் ஒருவேளையுண்டு மறுவேளையும் சிறிதுணவு எதிர்நோக்கியிருக்கின்றான். இது இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதலாகுமா? முன் கொடுத்ததனால் அவனை மேலும் இரக்கச் செய்வதன்றி வேறு பயனுண்டா? ஆகவே அவ்விரவலன பிறர் கையை எதிர்நோக்காது தன் உழைப்பால் பொருள் பெற்று உண்ணுமாறு கல்வியறிவுடையனாக்குதல் வேண்டும். இவ்வாறு அவன் இரப்பதற்குக் காரணமானவற்றை உணர்ந்து அதனை நீக்கி அறிவுடையனாக்குதலே 'இலனென்னும் எவ்வம் உரையாமை' ஈதலாகும். இது பற்றியன்றோ, பாரதியாரும்,

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்

அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத்தறி வித்தல்"

என மொழிந்து போயினர். நாட்டில் இரவலர்கள் எல்லாம் அறிவுடையராய் தமக்கேற்ற தொழில் புரிந்து வாழத்தொடங்கில் வறுமைப்பேய் தலைகாட்டா தொழியும். பிச்சை யெடுத்தல் என்பதே நீங்கும். நாடு நன்னிலையுறும். ஆகவே இரவலர்க்குத் தக்க கல்வியீதலே சிறந்த ஈகையாம்.

இப்பொழுது நாட்டில் சீரிய கல்வி புகட்டப்பட வில்லை. இப்பொழுது கற்பிக்கப்படும் கல்வி மாணவர்களை உத்தியோக வேட்டைக்கிழுத்துச் செல்லுகிறதே யன்றி உழைப்புக்கு இழுத்துச் செல்லவில்லை. இதனால் உத்தியோகத்திற்குச் செல்லவேண்டா மென்று கூறவில்லை. அனைவரும் அவ்வேலைக்குச் சென்றால் எங்ஙனம் வேலை கிடைக்கும்? அனைவரும் சிவிகை யூர்ந்தால் தாங்கிச் செல்லுவோர் யார்? உத்தியோக மில்லாதார் வேலையில்லாத் திண்டாட்டக் கழக உறுப்பினராகத் திகழ்கின்றனரேயன்றி அவர்களுக்குக் கைத்தொழில் ஒன்றும் தெரியவில்லை. தொழிற் கல்வியின்றி அடிமைக்கல்வி மட்டும் புகட்டுவதில் யாதொரு பயனுமில்லை.

தாய்மொழிக் கல்வியோ முற்றும் மறக்கப்பட்டு விட்டது. தாய்ப்பால் இல்லாக் குழந்தையின் வளர்ச்சியும் வளர்ச்சியாமோ? தாய்மொழிக் கல்வியில்லாக் கல்வியறிவும் பயன்படும் அறிவாமோ? தமிழ்மொழி பிறமொழியாளரும் விரும்பிப் பயிலும் வண்ணம் இயற்கை இளமைத்தன்மை குன்றாது திகழ்கின்றது. தண்டமிழ் நூல்கள் நமது முன்னோர் கண்ட அரும்பெரும் பொருள்களை நல்கும் வற்றாக் களஞ்சியங்களெனத் திகழ்கின்றன. ஒவ்வொருவர்க்கும் தந் தாய்மொழி வாயிலாகக் கல்வியமைதல் வேண்டும். பின்னர் அவரவர் அறிவாற்றல்களுக்கேற்ப வேற்றுமொழிப் பயிற்சி வேண்டப்படும். தாய்மொழியைப் புறக்கணித்து வேற்றுமொழியில் எத்துணை மேம்பட்டிருப்பினும் மொழியறிவாற்பெறும் பயன் முற்றும் பெற்றதாக மாட்டாது. இவற்றை யுணராது, பிறமொழி பயிலும் தமிழ்மக்களிற் சிலர் தமிழ்மொழியின் அருமை பெருமைகளைப் பிறமொழி வாயிலாக உணர்கின்றனர். என்னே அவர்தம் தாய்மொழிப் பற்று! அவர் செய்கை தன் மனையாளின் நற்குணங்களைப் பிறன் மனையாளிடம் கேட்டறிபவனது செய்கையன்றோ ஒத்துள்ளது? 'பாரொடு திசை பரவிய தமிழ்' பயில்வாரற்றுக் கிடந்தது. இப்பொழுது சில செல்வரது முயற்சியாலும் தமிழ் மக்களது கிளர்ச்சியாலும் சிறிது ஆக்கம்பெறத் தொடங்கி யுள்ளது.

செல்வர்களனைவரும் அரசியலாரையே முற்றும் எதிர்நோக்கிராது தாய்மொழிப் பள்ளிகளை எங்கும் ஏற்படுத்தல் வேண்டும். அவற்றுள் சீரிய தொழில் கல்வியும் மாணவர்க்குப் பயிற்றுவிக்க

வேண்டும். இதனால், பிற கல்வியோ, பிறமொழிக் கல்வியோ கூடாதென்பது கருத்தல்ல. இவற்றை அடிப்படையாகக் கொண்டே அவை பயிற்றப்பட வேண்டும். இவற்றிற்குரிய கழகங்களை நாடெங்கும் அமைத்தல் வேண்டும். அவற்றிற்கு வேண்டிய பொருள்களைச் செல்வர்கள் ஈதல் வேண்டும். படிப்பதற்கு எண்ணமில்லாத மாணவர்கள் ஒரு புறமிருக்க, படிப்பதற்கு விரும்பும் எண்ணமும் அறிவும் உடையரா யிருந்தும் தக்க வசதியின்மையால் கல்வியறிவு பெறாது பல மாணவர்கள் இருக்கின்றனர். அவ்வேழை மாணவர்களை யெல்லாம் செல்வர்கள் ஆதரித்துக் கல்வி பயிற்றுவிக்க வேண்டும். சுருங்கக் கூறின், இலவச வுணவு விடுதிகளோடு (Free Boarding and lodging) கூடிய தமிழ்ப் பள்ளிகளைச் செல்வர்கள் நாடெங்கும் தோற்றுவித்தல் வேண்டும். தோன்றிய பள்ளிகளை ஆதரித்தல் வேண்டும். 'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல, தூதிய மில்லை யுயிர்க்கு' என்னும் வள்ளுவர் நன்மொழிகளை உன்னிச் செல்வர்கள் நாடெங்கும் தொழிற்கல்வியோ டியைந்த தமிழ்ப்பெரும் பள்ளிகளைத் தோற்றி, கழுவிப் பயன்படுத்துவா ரின்மையால் மாசுபடிந்த மாணிக்கம் போல வறுமையால் மழுங்கிய அறிவுடையராய் ஏழைமக்களை ஆதரித்துக் கல்வியறிவூட்டுதல் செல்வம் பெற்றதன் நற்பயனாகும். அங்ஙனம் செய்தார் தமிழ்மக்களின் நன்றிக்கும் வாழ்த்துக்கும் உரியராக—உண்மையில் தம் கடமையைச் செய்தாராகத் திகழ்கின்றார்கள். பிற செல்வரும் அங்ஙனம் செய்தல் வேண்டும். அங்ஙனமின்றித் தம் செல்வத்தால் நற்பயன் காணாது வறிதே செலவழிப்பாராயின்,

"செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தின்றிக் கெடும்"

என்னும் வள்ளுவர் வாய்மொழியினை உன்னிச் செல்வதின்றி வேறு என்ன செய்ய வல்லோம்?

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



(சென்ற இதழின் தொடர்ச்சி)

தமக்குச் சொந்தமான சுமார் ஐம்பது ஏக்கர் நிலத்தை, அதிலிருந்த அழகிய மாளிகையுடன் மிகக் குறைந்த விலைக்கு அடிகளுக்குக் கொடுத்து விட்டார். இந்த மாளிகையில்தான் சுமார் எட்டு ஆண்டுகட்கு முன், சபர்மதியை விட்டுப் புறப்பட்ட அடிகள் வந்து தங்கினர். இன்று, உலகில் மிக முக்கிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்திருக்கின்ற சரித்திரச் சிறப்புப் பெற்ற விடங்களில் வார்தாவும் ஒன்றுனது அடிகள் அங்கு வந்த பிறகுதான் என்பதை விளக்கவேண்டியது இல்லை. தமது நெடுநாளைய விருப்பமாகிய குடிசைத் தொழிலைத் தொடங்குவதற்கு மகன்வாடி போதிய விடமென்று எண்ணினர் அடிகள். இந்தக் குடிசைத் தொழிலைத் தொடங்கி நடாத்த திரு. ஜே. சி. குமரப்பா அவர்களே தக்கோர் என்று அடிகள் துணிந்தார். (இந்த ஜே. சி. குமரப்பா யாரென்று பிறகு விளக்குகிறேன்.)

## மகன்வாடி அமைப்பு

வார்தாவிற்கு மேற்கே இருப்பது மகன்வாடி. மகன்வாடியையும், வார்தாவையும் பிரிப்பது அதோ குறுக்கே செல்லும் அந்த ஒரே பாதை தான். வார்தா புகைவண்டி நிலையத்தி லிறங்கி ஒரு பர்லாங்கு மேற்கே சென்று, பிறகு வடக்கே திரும்பினல் இரண்டு பர்லாங்கில் மகன்வாடியின் முக்கிய பாதையுளது. இப்பாதை மகன்வாடியின் நிலப்பரப்பை இரண்டாகப் பிரித்துக் கொண்டு மேற்கே செல்லுகிறது. இப் பாதையில் தான் அகில இந்திய கிராமக் கைத்தொழில் பொருட் காட்சி சாலை யிருக்கிறது. இதற்கு அடுத்த வாசல் அ. இ. கி. கை. தொழிற்சாலையின் காரியாலயம் — முன்பு அடிகள் தங்கியிருந்த மாளிகை—செல்கிறது. அதை யடுத்து இருப்பது மகன்வாடியின் இதயமான தொழிற்சாலையின் அழகிய வாயில். அது காண்போர் கண்களைக் கவர்ந்து, உயிர்க்களையோடும் கூடிய சித்திரங்களையுடையது. இவைகளுக்கு எதிர் வரிசையில் "கிராம சேவக் துக்கான்" என்னும் கடை, வித்தியாலய மாணவர் விடுதி, தொழிற்கூட உத்தியோகஸ்தர்களுக்கான விடுதி, இவைகளுக்கு அடுத்தாற்போல் திரு. பரதன் குமரப்பா தம்பதிகள் வதியும் இல்லம். இவைகளை யெல்லாம் ஒன்றுகச் சேர்த்துக் கொண்டிருப்பதுபோல் நாற்புறமும் சுற்றிக்கொண்டு செல்லுகிறது நகர சபைப் பாதை.

இவ்வாறு நாற்பாங்கரும் காவலமைந்து, பூம்பொழில்களும், கனிதரு மரங்களும் சூழ்ந்து இலங்குவது அந்தப் பெரிய மாளிகை—இறந்துபடும் இந்தியக் குடிசைத் தொழிலுக்குப் புத்துயிரளிக்கும் கருணைக்கோயில். இம் மாளிகையில்தான், அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தைத் தோற்றி செயல் புரிந்து வரும் திரு. ஜே. சி. குமரப்பாவும், அவருக்குத் தம்பியான திரு. பரதன் குமரப்பா தம்பதிகளும் பணியாற்ற இடம் வகுக்கப்பட்டுள்ளது. மற்றொரு பக்கம் குடிசைத்தொழில் சம்பந்தமான அரிய நூல்கள் நிறைந்த நூல் நிலையம் ஒன்றுளது. இதில் சுமார் ஐயாயிரம் நூல்கள் இருக்கலாம். இங்கிருந்துதான் திரு. ஜே. சி. குமரப்பாவால் நடத்தப்படும் **"Village Industry"** என்னும் ஆங்கில மாத வெளியீடும், "கிராம சேவக்" என்னும் ஹிந்தி மாத வெளியீடும் வெளி வருகின்றன. இம் மாளிகைக்கு

அணித்தே திரு. ஜே. சி. குமரப்பா அவர்களின் சிறு குடிலும், மற்றச் சிப்பந்திகட்கு விடுதிகளும் அமைந்துள்ளன.

மற்றொருபக்கம் விருந்தினர் விடுதி உளது. இதில் தொழிற் சாலையைக் காண வெளியிலிருந்து வரும் எல்லோரும் தங்கலாம். தங்குவோர் நாள் ஒன்றுக்கு 10 அணு கட்டி விட்டால் தங்க இடவசதியுடன் இருவேளை உணவுக்கும் ஏற்பாடு செய்யப்பட்டு விடும். இதற்கு மேற்குப் பக்கத்தில், மகன் வாடியில் நிகழும் எல்லாத் தொழில்களுக்கும் தனித் தனியே விடுதிகள் உள. அதாவது வெல்லம் காய்ச்சல், நெல் அரைத்தல், எண்ணெய் எடுத்தல், மண் பாத்திரம் செய்தல், தேனீ வளர்த்தல், இராட்டை நூற்றல், சவுக்காரம் செய்தல், காகிதத்தாள் செய்தல் ஆகியவை.

இது வரை மகன்வாடி வரலாறும், அமைப்பும் ஒருவாறு கண்டோம். இனி அவ்விடத்திற்கு மகன்வாடி யெனப் பெயரிட்டதற்குக் காரணமுங் காண்போம்.

## பெயர் வந்த வரலாறு

மேலே குறித்தபடி அடிகள், திரு. ஜே. சி. குமரப்பாவால் அகில இந்திய கிராமக் கைத்தொழிலை நடத்திவருங் காலத்தில் ஓர் நடுங்கத்தக்க நிகழ்ச்சி நேர்ந்தது விட்டது. உலகத்தில் கால தேவனின் ஆட்சிக்கு மிஞ்சியது யாதுமில்லை யன்றோ? அவதார புருஷர்கள் தோன்றுகின்றனர். அருஞ்செயல் புரிகின்றனர். மங்காப் புகழ் எய்துகின்றனர். பிறகு என்றைக்கேனும் ஓர் நாள் இறப்பென்னும் மாயப்புலி வாய்ப்பட்டு மாள்கின்றனர். என்னே மனிதன் கதி! ஒருவரேனும் இம்முடிவினின்றும் தம்மைக் காத்துக்கொள்ளக்கூட வில்லையே! ஆகவே இதே முடிவைத்தான் மகன்லால் என்னும் அருமைத் தொண்டரும் அடைந்தார். இவர், அடிகளின் மருமகனுவர். அடிகள் தென்னுப்பிரிக்காவிலிருந்து திரும்பி, இந்திய அரசியலில் கால் வைத்த நாள் தொட்டு, கதர் இயக்கத்திற்கு ஓயாது உழைத்தவர். கைத்தறி பயிற்சிக்கென்று இருபது ஆண்டுகட்கு முன்னரே சென்னை மாகாணம் வந்து பயிற்சிபெற்று சபர்மதி சென்று, கதரியக்கத்தையும், ஏனைய அடிகள் வகுத்த பொருளாதாரத் திட்டங்களையும் தாங்கிப் பணியாற்றியவர். எனவே, இவ் வீரத்தொண்டரை யிழந்து நாடு அடைந்த நஷ்டம் மிகப் பெரிய தென்பதை அடிகள் உணர்ந்து மனமுடைந்திருந்தார். அப்போது புதிதாய் நிறுவிய கைத்தொழில் நகரத்திற்குப் பேரிடும் பிரச்சினையும் முன்னின்றது. எனவே, மகன்லாலைப்போன்ற ஒரு தொண்டர் பேரை, அவர் லட்சியத்தையே தனது குறிக்கோளாகக் கொண்டுள்ள கைத்தொழில் நகருக்குச் சூட்டுவது சாலப் பொருத்த மென்று பலரும் விரும்பினர். இது, கன்றை யிழந்து கதறும் பசுப்போன்ற அடிகளுக்கு ஆதரவு நல்குவதாயிற்று. எனவே மகன்வாடி என்ற பேருடன் அப்பதி இன்று நிலவுகின்றது.

## தொழில் விளக்கம், காகிதம்

மகன்வாடியில் வளரும் தொழில்கள் என்னென்ன வென்பதை ஒருவாறு அறிவோம். அவைகளை இனி ஒவ்வொன்ருய் விளக்குவோம். அங்கு பயிற்றும் தொழில்களில் காகிதத்தாள் செய்வதும் காணத் தொழிலும் முக்கியமானவை. முன்பு கையிறைற் செய்யும் காகிதத் தொழிலை யாராய்வோம். காகிதத்தாள் இப்போதைய நாகரீகத்து இன்றியமையாத ஓர் பொருள். இது கிராமங்களுக்கும் தேவை. ஆனல், இதை கிராம மக்கள் காசு செலவின்றி, ஒவ்வொரு கிராமத்திலும் எவ்வாறு செய்து கொள்வ தென்றுதான் மகன்வாடி தெரிவிக்கிறது. குடியானவன், தன் நிலத்தில் கிடைக்கும் வைக்கோல், சணல், பருத்தி, வாழைப்பட்டை யாகிய பொருள்களிலிருந்து

நேர்த்தியான தாள்கள் செய்ய முடிகிற தென்பதை நேரில் பார்க்கிறபோது, உவகை மேலிடுகிறதன்றோ? இவ்விதம் பயன் படுத்தாமல் பாழ் படுத்தும் மூலப்பொருள், கைப் பணமாக மாற்றும் சக்தியை மகன்வாடி, தன் நாட்டு மக்களை அழைத்து அளிக்கிறது.

## காணம்

எண்ணெய், உணவுப் பொருள்களில் முக்கியவிடம் பெறுகிறது. சில வாண்டுகட்குமுன் வரை காணத்தின் உதவி கொண்டே எண்ணெய் வித்துக் களிலிருந்து எண்ணெய் எடுத்து வந்தார்கள். ஏன்? இன்னமும்கூட நமது தமிழகத்தைப் பொறுத்தவரை இது கண் கூடாகக் காணக்கூடிய வுண்மை. இத்தொழில் மூலம் பல்லாயிரக் கணக்கான நாட்டு மக்கள் தொழிலும், பணமும் பெற்று மகிழ்ச்சிகரமாய் வாழ்ந்து வந்தார்கள். ஆனால், யந்திர நாகரிகம் தோன்றியபின் முதலாளி வர்க்கம் யந்திரங்களை யமைத்து, அதன் மூலம் எண்ணெய் எடுக்கத் தொடங்கி விட்டது. இதன் காரணமாய் ஓர் முக்கிய குடிசைத்தொழில் மரணப் படுக்கையில் விழுந்தது. இத்தொழிலை யிழந்த மக்கள் பட்டினியால் பரதவிக்கின்றனர்.

இதை யறிந்த மகன்வாடி இத்துறையில் கவனம் செலுத்துவதாயிற்று. செலுத்தியதின் பயனாய் ஓர் புதிய முறையான செக்கை அங்கே கண்டு பிடித்தனர். இந்தப் புதிய செக்கில் இந்நாட்டின் பல பாகங்களிலும் கையா ளப்பட்டு வந்த சில நல்ல அம்சங்களைச் சேர்த்திருக்கிறார்கள். அதனால், வேலை செய்யும் நேரம் குறைவதோடு, பாடும் குறைகிறது. எனவே, எண் ணெய் எடுப்பதற்காகும் செலவு குறைகிறது. உதாரணமாகத் தமிழ் நாட்டில் ஒரு செக்கை நடத்துவதற்கு இருவர் வேண்டியிருப்பது வாசகர்கட்குத் தெரிந்ததுதான். ஆனால், இரண்டு மகன்வாடி செக்கை ஒரே ஆள் நடத்த முடிகிறது. பாருங்கள்! எவ்வளவு நுணுக்கம் புகுத்தப்பட்டுளதென்று. மகன்வாடி அதோடு திருப்தியடைந்து விடவில்லை. இன்னமும் புதிய ஆராய்ச்சிகள் செய்த வண்ணந்தா னிருக்கிறது.

## சவுக்காரம்—சோப்பு

மேலை நாட்டு நாகரிகம் நமக்களித்த பொருள்களில் சவுக்காரமும் ஒன்று. இது நமது இன்றைய வாழ்வில் முக்கியவிடம் பெற்று விட்டது. ஆண்டு தோறும் 3 கோடி ரூபாய்ப் பெறுமதிப்புள்ள சவுக்காரம் இந்தியாவுக்குத் தேவை. இதில் பெரும் பாகத்தை நம்நாட்டிலே செய்கிறார்கள் என்பதை யறிய மகிழ்கின்றோம். நம் நாட்டில் தொடங்கிய தொழில்களில் சவுக்காரம் போல் வெற்றியான தொழில் வேறு ஒன்றுமில்லை யென்று சொல்லி விட லாம். நமது சவுக்காரம் ஜெர்மனிக்குச் செல்வ தென்றால் நமது நெஞ்சம் பூரிக்கத்தான் செய்கிறது.

ஆனால், சவுக்காரத்திற்கான மூலப்பொருள்களில் ஒன்றான சோடா வுப்பை—காஸ்டிக் சோடாவை ரசாயனம் உற்பத்திசெய்யும் இந்தியக் கம்பெனிகளிடமோ அல்லது பெரும்பாலும் வெளிநாடுகளிலிருந்தோ வாங்க வேண்டி யிருக்கிறது. எனவே, இவ்வகையில் ஒரு பெருந் தொகையை வெளிநாடுகளுக்குத் தள்ளிக்கொண் டிருக்கிறோம். இது செயற்கை சோடா வுப்பு. இயற்கையாயும் நம் நாட்டில் சோடாவுப்பு கிடைக்கிறது.

(தொடரும்)

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### 16. சனி உலகின் எடையும்—இறுக்கமும்

இவ்விதம் பலன் நிகழ்த்துவதில் மிகவும் முக்கியமான சனி உலகின் சிறப்புக்களைப் பற்றிய உண்மைகள் பல வற்றையும் உறுதிப்படுத்துவதில் பெரிதும் துணை செய்கின்ற விஞ்ஞானத் துறையின் குறிப்புக்கள் சிலவற்றை இங்கு காணலாம்.

பரிமாணத்தில் வியாழனுக்கு அடுத்ததாக சனி உலகம் வருகின்றது. வியாழன் பூமியினும் ஆயிரத்து இருநூறு மடங்கு பெரிய தென்று நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். அதை அடுத்த பரிமாண முடையதாக சனி பூமியினும் எழுநூற்று எண்பத்து மூன்று பங்கு பெரியதாகும். இவ்வாறு பரிமாணத்தில் இரண்டாவதாக இருந்தாலும், எல்லாக் கோள்களிலும் சனி மிகவும் குறைந்ததாக விருக்கிறது. கனம் என்பது கோள்களின் கவர் சக்தியே.

பூமியின் சரக்கில் இரண்டரைப்படி (கியாலன்) அளந்து எடுத்து, நிறுத்துப் பார்க்க ஐம்பத்து ஐந்து பவுண்டு கனம் இருக்கும். அதே அளவு சனியில் சரக்கு எடுத்து நிறுத்தால் ஆறு பவுண்டுகள்தான் கனம் கொண்டதாகக் கணக்கிட்டிருக்கின்றனர். அதே அளவு நீர் எட்டரை பவுண்டு கன முள்ளது. எனவே, சனி தண்ணீரில் மிதக்கும் தன்மை கொண்ட தென நிச்சயிக்கப் படுகிறது.

சனிக்குள்ள இறுக்கம் பூமியினுடையதற்கு நூற்றில் பதின் மூன்றே தான். திரட்சி பூமியினும் 94·8 பங்கு அதிகம்.

#### சரக்குகள்

சனியில் மண்ணின் கூறும் நீரின் கூறும் சம அளவில் அமைகின்றது. தீக்கூறு அவற்றிற் குறைந்தும், வாயுவின் கூறு அவற்றில் மிகுந்தும் வாய்க்கின்றது. இந்த முறையில் தீ இருபத்தி நான்கு பங்கும், வாயு முப்பத்து ஆறு பங்கும் ஆக அறுபது பங்கு போக மீதமான பகுதிதான் சம அளவில் மண்ணும்—நீரும் சனி உலகில் என்று காணுகின்றனர். இதில் வாயுவின் கூறு தான் மிகுதியாகும். மிக்க குறைந்த தீக் கூற்றை விருத்தி செய்வதில் முன் இரண்டு கூறுகளும் அவ் அவற்றின் இயல்களினின்றும் குறைந்து விடக் கூடியதாக் ஆகின்றன. இதனால் இறுதியாகும் வாயுவின் கூறே மேலும் மிகுவதற்கு ஏதுவாக விருக்கின்றது. இவ்விதமான நிலைமையில் அந்த இரண்டின் தீக்ஷண்யம் ஏற்பது சதமான்ம் பாதிக்கப்பட்டு விடுகிறது. எனவே, சனி வாயுவின் ஆதிக்கம் மிகுந்தது என்று முடிவு செய்யப்படுகிறது.

இதன் சரக்குகள் முழுவதும் காட்சி எல்லையின் அப்பால் உணர்வு எல்லையின் பேறுகளுக்கு உரியனவாகப் பெரிதும் அமைகின்றன. முன்—பின் சத்துக்கள் சமமான அளவுகளில் வாய்க்கின்றன. இதனால் இதனை **அலிக்கிரகம்** என்று கருதுவர். இறைநிலையின் மிக அருகில் பரிசுத்தங்களையே காட்டுவதாய், அவ்வழி இக—பரங்களில் நல்ல வெற்றிகளுக்குத் துணை செய்வதாக விருத்தலின், பொதுவாக ஆதிபத்ய பலத்தில் அதிக விசேஷங் கொண்டதாக வருகிறது சனிப் பேருலகம்.

ஆனால், ஸ்திதி பலம் பெரும்பாலும் எவரும் அஞ்சத்தக்க தீய பலன்களைத் தருகின்றதெனக் காணுகின்றனர். சாதாரணமாக '**அகப்பட்டவனுக்கு அஷ்டமத்தில் சனி, ஓடிப் போனவனுக்கு ஒன்பதாம் இடத்தில் வியாழன்**' என்று ஒரு வசனம் நம்மிடை வழங்கி வருவதை யாரும் குறிப்பாகக் கவனித்திருத்தல் கூடும். சூரியனைச் சுற்றி ஓடும் வீதியில் சில சில இடங்களில் மிக்வும் கடுமையான பலன்களை சனி நிகழ்த்துகின்றதென்று நம்பப் படுகின்றது. சில இடங்கள் உலகுக்கே பெருந்தீங்குகளுக்கு உரியன வென்று பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

இராசிகளில் **மீனம்-ரிஷபம்-சிம்மம்** இவற்றுள் சனி சஞ்சரிக்கும் பொழுது உலகில் பஞ்சமும்-வறுமையும்-நோயும் இருக்கு மென்று அறிகிறோம். இந்த உண்மைகளை இலக்கிய ஆசிரியர்கள் முதல், சமய முதல்வர்கள் வரை எல்லோருமே கூறி வைத்திருக்கின்றனர். கோள்கள் எதுவும் என்ன செய்து விடும் என்று '**கோளறு பதிகம்**' பாடிய திருஞான சம்பந்தர் கழுமலம் என்னும் தலத்துத் தேவனை நோக்கிப் பாடிய பதிகத்தில் 'விலங்கல்மர் புயன் மறந்து **மீன் சனி புக்கு** ஊன் சலிக்குங் காலந் தானும்' என்று மீனராசியில் சனியின் சஞ்சார பலனைக் குறிப்பிடுகிறார்.

'மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்' என்று சுந்தரமூர்த்தி நாயனார் கூறுகின்றார். 'மகம்' என்பது இருபத்து ஏழு நக்ஷத்திரங்களில் ஒன்று. அது இடம் பெறுவது **சிம்ம** ராசியில். அந்த சிம்ம ராசியில் அந்த மக நக்ஷத்திரம் இடம் பெறும் பரப்பின் வழி சனியின் சஞ்சாரம் துன்பம் தருவதென்று அறிந்தவராய், அவ்விதம் துன்பந் தருகின்ற சனியாக விருக்கின்றாய் என்று தம்முடைய முன்னிலையைக் கூறுகின்றார்.

'கரியவன் புகையினும், புகைக்கொடி தோன்றினும்' என்று சிலப்பதிகாரத்தும், 'மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்—தென்றிசை மருங்கின் வெள்ளி ஓடினும்' என புறநானூற்றும் காணப்படுகிறது. கரியவன்—மைம்மீன் இவ் இரண்டும் சனிப் பெருங் கோளையே குறிக்கும். ஏனையோர் காணும் பொருளினும் அடியார்க்கு நல்லார் "சனிக் கோள் **மீனம்-இடபம்-சிங்கம்** என்னும் இந்த ராசிகளில் சஞ்சரிக்கும் பொழு" தென்று கூறும் பொருள் மிகவும் பொருத்த மென்று தெரிகிறது.

இவ்விதம் இலக்கிய ஆசிரியர்களும்—தெய்வப் பெற்றியின இனைத்தவர்களும் தங்கள் உரைகளில் இடந்தரும்படியான [illegible]

# “ஆனந்தனு”க்குப் பாராட்டு

(1)

ஆனந்தம்! ஆஹா! எவ்வளவு அழகான பெயர்! படிப்போருக்கும் ஆனந்தம். செவி மடுப்போர்க்கும் ஆனந்தம். மனத்தால் அள்ளிக் குடிப்போர்க்கும் ஆனந்தம். இப்படி அளவிலா ஆனந்தத்தை அளிக்கும் **ஆனந்தபோதினி**யாம் என் அருமைத்தாயே! வாழ்க.

நவநாகரீகம் என்ற பேயின் ஆட்சிக்குள் அடிமைப்பட்டு மயங்கித் திரியும் இந்நாளில் வெளிப்பகட்டும், விளம்பர ஆபரணங்களையும் பூண்டு வெகு கம்பீரமாய் உலாவும் பத்திரிகைகளுக்கிடையே, ஆடம்பர மற்று, பிற நலம் பேணி தன் கொள்கையும் கடமையுமே பெரிதென உறுதி பூண்டு, “போது மென்ற மனமே பொன் செயும் மருந்து” என்ற பழ நீதியை மறவாது, மிகச் சிறிய சந்தாத் தொகைக்காக உழைக்கும் உன் அரிய தொண்டை என்னென்பேன்! ஒரு தாய், தன் குழந்தைக்கு தேவையானது இதுதான் என, அறிந்து செய்யும் உதவிபோல், மானிடர்க்கு வாழ்க்கையில் இன்றியமையாதன வாகிய கல்வி, சுகாதாரம், சரித்திரம், பழங்கால நூற்களிலுள்ள விசேடங்கள், விஞ்ஞானம், தேசமுன்னேற்றம் முதலிய முக்கிய துறைகளிலும், இன்னும் காதால் கேட்டறியாத பற்பல அற்புத விஷயங்களை தத்ரூபமாய் எடுத்துக் காட்டும் என் அருமைத் தாயே! உன் உபகாரம் தான் என்ன!

“செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது”

என்பது போல், உன் உதவிக்கு என் மனமுவந்த ஆசியே அன்றி வேறென்ன உதவி செய்ய முடியும்?

சுயநலங் கருதாது, பல அல்லல்களுக் கிடையில், அல்லும் பகலும் தமிழன்பர்களுக்கு, நின்னிடத்து விளங்காநின்ற தெள்

---

யத்தைக் கொண்டிருக்கிறது. சனிக் கோள் என்பதிலிருந்தே அதன் சிறப்புக்கள் நன்கு தெரியலா மல்லவா! அவ்விதம் கூறுவதிலிருந்து சனிக் கோள் தீய பலன்களில் தான் வலுவுள்ளதென்று கொண்டு விடாதீர்கள்.

சனி உணர்வு எல்லையின் ஆதிக்கம் கொண்டது. உணர்வின் தூய்மைகளில் அதன் பலன் சிறந்தது. இவ்வழி இகத்திலும்—பரத்திலும்—அவை இரண்டும் கடந்த பெரும்பதத்திற்கும் அரிய பலவற்றை நிகழ்த்துவதில் நிகரற்றது சனியேதான். இந்த உண்மைகளை அதன் இயற்கையிலேயே வரும் பலன்கள் இனிது விளக்கும். அந்த விவரங்களையும்—பல பாகம் கூறும் விளக்கங்களையும் அடுத்த இதழில் காணுவோம். (தொடரும்.)

ளமுதாம். தமிழுணவை ஊட்டி வளர்ப்பது போல், இனியும் சீரும் சிறப்புமுற்று சிரஞ்சீவியாய் வாழ எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுகிறேன்.

**M. அய்யாமுத்து, புதுவலசு.**

**(2)**

போர்ப்புயலிற் சிக்கித் திசை கெட்டுத் தடுமாறும் நிலையில், எத்துணையோ வெளியீடுகள் முற்றும் அடுக்கிய இடுக்கணை மிடுக்குடன் எதிர் நிற்க வாற்றாது மறைந்தன. இந்நிலையில் பெரிதும் இக்காலங்களில் வெளியீடுகள் எல்லாம் உண்மையாகத் தமிழ்க் கலை வளர்ப்பதாகக் காண்கிலேன். தங்கள் இதழ் மட்டும், மேற் கூறிய குறைகளின்றி வெறும் பெண்களின் எழில் வண்ணப் படங்களாற் சித்திரித்து, சுவைக்குதவாக் கதைகளைக் கதைத்து கொன்னே வளராமல், எவ்வெவர்க்கும் இடந்தந்து, கலைவளர்ச்சியிற் குறிக்கோள் பிழையாது செல்வது காண என்னுள்ளம் இறும்பூ தெய்துகிறது.

**M. A. தேவராஜன், திருவத்திபுரம்.**

**(3)**

ஆனந்தபோதினியில் வெளிவரும் சரித்திர சம்பந்தமான கட்டுரைகள், தமிழ்க்கலை பற்றிய கட்டுரைகள் வாசிக்க வாசிக்க இன்பங் கொடுக்கின்றன. உங்கள் பத்திரிகை தமிழ்நாட்டிற்குப் பல்வகையிலும் தொண்டாற்றி வருகிறது.

**ஒ. வெ. நரசிம்மன், மதுரை.**

**(4)**

“தமிழ்மொழி செய்யுள்மொழி; எனவே, பத்திரிகையில் இயன்றமட்டும் அதிக அளவில் செய்யுட் கட்டுரைகள் வெளியிட வேண்டுகின்றேன். ‘ஆனந்தபோதினி’யின் அதிதீவிர வளர்வு குறித்து ஆண்டவனை வேண்டுகிறேன்.

**ஏ. இளங்கோவன், நெல்லை.**

**(5)**

[விருத்தம்]

முதுதமி ழறிந்த தூய முனிவனுஞ் சாமி செய்த
பொதுநலத் தொண்டிற் றோன்றும் புகழ்மிகு ஆனந்தா நீ
மதுமலர் வண்டே போல வளந்தமிழ் கூட்டி நாளும்
புதுமண நெறியி லோங்கப் போற்றினோம் வாழ்க மன்னே.

**காரை. க. ஆறுமுகம், சிலோன்.**

---

# கணேசனின் தாயார்

[வீரசக்தி]

மேலே கண்ட தலைப்பின் கீழ் போன மாதம் "ஆனந்தபோதினி"யில் ஒரு சிறு கதை வெளியாயிருந்தது. அக்கதையின் முடிவு என் சிந்தனையை அல்லோலப்படுத்தி விட்டது. கதைகள் சோகத்திலே முடியும்படி எழுதுவது தற்காலத்துச் சம்பிரதாயமே; எனினும் இக்கதையின் முடிவை எதிலும் சேர்க்க முடியாது. வாசிப்பவர்களை அது திகைக்க வைத்து விடவில்லை. அதற்குப் பதில் வேதனைப் படுத்துகிறது. கணேசனின் தாயாரின்மேலேற்பட்ட பரிதாப வேதனை யன்று. அக்கதையாசிரியரின் போக்கின் மேலேற்பட்ட பரிதாப வேதனைதான். சந்தர்ப்பம் அறிந்து கொள்ளுவதற்காக அக்கதையின் சுருக்கம் கீழே தருகிறேன்.

கணேசன் ஒரு விதவையின் மகன். அவன் மிகவும் ஏழை. பத்தாம் வகுப்பில் படிக்கும் கணேசன் பரீக்ஷை பணம் கட்டமுடியாது தவிக்கிறான். வழியொன்றும் இல்லை. உதவி செய்வார் யாரும் இல்லை. காமப்பேய் பிடித்த அவ்வூர்ப் பண்ணையார் உதவி செய்வதாகச் சொல்லுகிறான். அதற்காக அவனின் தாயாரை இரவு ஏழு மணிக்கு வரச் சொல்லுகிறான். ஒன்றுமறியாத கணேசன் தன் தாயிடம் கூறி பண்ணையாரிடம் சென்று பணம் வாங்கி வரும்படி வற்புறுத்துகிறான். அந்தப் பண்ணையார் முன்னொரு சமயம் குளித்துவிட்டு வழியே போன கணேசனின் தாயாரை, (அப்போது அவள் புருஷன் உயிரோடிருக்கிறார்) "என்ன காந்திமதி! உன் புருஷன் வயற்காட்டிலிருந்து திரும்பி வருவதற்கு இன்னும் எவ்வளவோ நேரமாகுமே. அதற்குள் என் வீட்டிற்கு வந்து விட்டுப் போயேன். ரொக்கமாக நூறு ரூபாய் தருகிறேன்" என்று சொன்னதைக் காந்திமதி இன்னும் மறக்கவில்லை. ஆனால் மகனுக்கு என்ன சொல்லுவதென்று விளங்காதவளாய் பண்ணையாரிடம் செல்லச் சம்மதிக்கிறாள்.

அன்றிரவு காந்திமதி பண்ணையார் வீட்டிலிருந்து திரும்பி வரும்போது மணி சுமார் பத்திருக்கும். "என்னம்மா ஆயிற்று?" என்றான் கணேசன். "நூறு ரூபாய் தந்திருக்கிறார். அது உன் பெட்டியிலேயே இருக்கட்டும்" என்று சொல்லி ரூபாயைக் கணேசன் கையில் கொடுத்து விட்டு சமையற்கட்டிற்குப் போய் விட்டாள்.

அதோடு ஆசிரியர் கதையை முடிக்கிறார். இம்முடிவிலிருந்து நமக்கு யாதொரு சந்தேகமோ, திகைப்போ ஏற்பட வில்லை. அவள் கற்பிழந்து விட்டாள் என்பது மட்டும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிகின்றது. தாயின் அளவுகடந்த தியாக சிகரத்தைக் காட்ட வேண்டுமென்பது கதை ஆசிரியரின் எண்ணம் போலும். அதை அவர் தலைகீழாகக் காண்பிக்கிறார். குளக்கரையிலே வானளாவி வளர்ந்திருக்கும் மரத்தின் உச்சியை அடைவதற்குப் பதிலாக, தண்ணீரிலே தோன்றும் அம்மரத்தின் நிழலின் உச்சியை அடைய எத்தனிக்கிறார்:

தாயின் தியாகத்தை யாரும் மறுப்பதற்கில்லை. அவள் செய்யும் எத்தனையோ தியாகங்களைக் கேட்டிருக்கிறோம்; பார்த்துமிருக்கிறோம். தன் அழகிய கூந்தலை வெட்டி விற்று வியாதியிற் கிடக்கும் தன் குழந்தையைக் காப்பாற்றவும் முன் வந்திருக்கிறாள். தன் அழகிய பல்லையும் விலைக்கு விற்றதாக "விக்டர் ஹியூகோ" எழுதிய "லே மிசரபின்" என்ற பிரெஞ்சு

காவலில் காண்கிறோம். ஏன்? தன் குழந்தைக்காக உயிரையே தியாகம் செய்கிறாள்.

ஆனால், கற்பை இழந்ததாக எங்கும் கூறப்படவில்லை. ஒரு வேளை மேனாட்டுக் கதைகளிலே இவ்வித சம்பவம் வர்ணிக்கப்பட்டிருக்கலாம். நம் தமிழ் கதைகளிலோ, அல்லது காவியங்களிலோ, இவ்வாறு நேர்ந்தது கிடையாது. சாதாரண வாழ்க்கையிலும் அக்கம்பக்கத்திலும் இவ்வித சம்பவங்கள் நிகழ்ந்திருக்கலாம். ஆனால் மனிதனின் இதயத்தைப் பண்படுத்தும் இலக்கியத்திலே இப்படி எழுதப்பட்டது கிடையாது. சோகத்தில் முடியும் எவற்றையுமே நம் முன்னோர்கள் விரும்பவில்லை. சோகமாக முடியும் கதையையும் சிவனையோ திருமாலையோ தோன்றும்படி செய்து அதை இன்பமாக முடிக்கின்றனர். கடவுள் வாழ்த்துக் கூருது எதையும் எழுதத் துணியாததுபோல், மங்களம் பாடாமல் அதை முடிக்க விரும்பமாட்டார்கள். உதாரணமாக அரிச்சந்திரன் கதையை எடுத்து நோக்கலாம்.

தற்காலத்திலே—இன்ப முடிவைக் காட்டிலும்—சோக முடிவே மனித உள்ளத்தை அதிகமாகப் பண்படுத்துகிறது என்று எண்ணப்பட்டு சோகக் கவிதைகளும், சோக நாடகங்களும்—கதைகளும் இயற்ற முற்படுகின்றனர். இதை நான் மிகவும் ஆமோதிக்கிறேன். ஆனால் நாம் எடுத்துக்கொண்ட இக்கதையின் முடிவை நான் எந்த விதத்திலும் பாராட்டத் துணிந்திலேன். அதோடு, இதை எண்ண மிகவும் வ்ருந்துகிறேன். கணேசன் படிப்பிற்காக அவள் தன் உயிரை விட்டாள் என்றால் அதற்காக நான் கவலைப்படப் போவதில்லை. அவளின் தியாகத்தை எண்ணி எண்ணி வியப்புறுவேன். தாய்க்குலத்தை என்றும் மறக்காதிருக்க முயலுவேன். அவர்களைப் புகழ்வேன். ஆனால் பரீக்ஷைப் பணம் கட்டுவதற்காக அவள் தன் கற்பை இழந்தாள் என்றால் அது என் சிந்தனையை வானளாவ வளர்ப்பதற்குப்பதில்—அதை சுக்கு நூருகச் செய்து சிந்திக்கவும் சக்தியறும்படி செய்து துக்கிக்கும்படி செய்து விட்டது. அவ்வுணர்ச்சியை நான் எவ்வாறு கூறமுடியும்? உள்ளத்தை என்னமோ செய்கிறது என்று மட்டும் கூறமுடியும்.

என்னைப்போல் எத்தனையோ பேர் உணர்ந்திருக்க வேண்டுமென்பது என் துணிபு. ஏனெனில், இதைப் பரிக்ஷிக்க என் நண்பர் இருவரைத் தனித்தனி வாசிக்கச் செய்து அபிப்பிராயம் கேட்டதில் இதே நோக்கத்தையே கேட்டேன். "அவள் கணேசனுக்காகத் தியாகம் செய்தது சரிதான். கற்பைத் தியாகம் செய்தாள் என்ற போது மட்டும் எப்படியோ இருக்கிறது" என்று என்னைப்போல் அவர்களும் தங்கள் உணர்ச்சியை விளக்க இயலாது மழுப்பி விட்டார்கள். தாயின் உள்ளம் அளவுகடந்த தியாக உணர்ச்சியால் கற்பையும் இழக்கும்படியான அவ்வளவு தைரியம் உண்டாயிருக்கலாம். ஆனால் அதைக் கேள்விப்படுவதோடு நிற்கவேண்டும். இலக்கியக் கட்டுரைகளிலும் கதைகளிலும் அதைக் காண்பது சகிப்பதற்கரியது. இவற்றைச் சகிக்க நம் தமிழரின் அநாதிகாலந் தொட்டுப் பரம்பரையாக வரும் நாகரீகம் இடம் தரவில்லை. அவ்வளவு நுண்ணியது நம் தமிழர் நாகரீகம். இது மேனாட்டாரிடையே அற்பமாகத் தோன்றலாம். தமிழ் நாட்டில் அப்படியன்று.

ஆதலால், நேயர்கள் இவ்வாறு முடியும் கதைகளை எழுதி வாசிப்போரின் உள்ளத்தை (உருகச் செய்வதற்குப் பதிலாக) உடைக்காதிருக்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

# தேவ தேவி

(வத்றாப்-சு. மீ. கணபதி)



“இன்னும் சில நாட்கள் இங்கிருப்பாயா?” என்று கேட்டுக் கொண்டே பக்கத்திலிருந்த சேவகனைப் பார்த்தார். அவன் சென்ற சில நிமிடங்களில் மூன்று தட்டுகளில் பிஸ்கட்களும், பழங்களும், காபியும் வந்தது. அவரும், கமலாவும் சாப்பிட ஆரம்பித்தனர். என்னையும் சாப்பிடச் சொன்னார். எவ்வளவு பசி யிருந்தாலும் கௌரவம் ஒன்று இருக்கிற தல்லவா? நான் கமலா பகலில் பேசாமலும் சாப்பிடக் கூப்பி டாமலிருந்தும் இப்பொழுது எப்படி சாப்பிட மனம் வரும்? நான் மறுத்து விட்டேன். இது அவருக்குக் கோபத்தைக் கொடுத்து விட்டது. “சாப்பிட இஷ்ட மில்லாவிடில் இங்கு யாரும் வற்புறுத்தத் தயாராயில்லை. நாங்கள் சாப் பிட்டு முடிக்கும் வரை வெளியில் சென்றிரு. அப்புறம் நீ ஏதாவது கூற விரும்பினால் இங்கு வரலாம்” என்றார். நான் நேராக என் தகப்பனாரிடம் சென்றேன். அவரை நான் ஒரு மாதத்திற்குள் கூட்டிக்கொண்டு போவதாகச் சொல்லி, நான் ஊருக்குத் திரும்ப அனுமதி கேட்டேன். “குறைந்தது இரண்டு நாட்களாவது இருந்து போ” என்று வற்புறுத்திய தால் இருந்து வந்தேன். நான் அங்கிருக்கும் வரையில் ஹோட்டலில் சாப் பிடுவது தகப்பனாரிடம் இருப்பது இவ்விதமாகவே செய்து வந்தேன். கமலா காலையில் ஏழு மணிக்கும், மாலையில் ஐந்து மணிக்கும் என் தகப்பனாரைப் பார்க்க வருகிறாள். வந்ததும், “என்ன அப்பா! எல்லாம் சௌகரியமாக இருக்கிறதா? டயம்படி வேலைக்காரி சாப்பாடு முதலியன கொண்டுவந்து கொடுக்கிறா ளல்லவா? வேறு ஏதாவது உங்களுக்குத் தேவையா யிருந்தால் சொல்லுங்கள். தருவித்துத் தருகிறேன்,” என்பாள். என் தகப்பனார் எல் லாம் சௌகரியம் தான் என்பார். மூன்றாவது நாள் கமலா என்னை என் தகப்பனார் அறையிலிருந்து அழைத்துச் சென்றாள். சாப்பிட வேண்டும் என்று பலமுறை வற்புறுத்தினாள். நான் ஒரே யடியாக மறுத்து விட்டேன். எனக்கு புத்தி சொல்ல ஆரம்பித்தாள். வேறு பேச வேண்டி யிருப்பின் பேசும்படி கூறியவுடன் என் மண விஷயமாகப் பேசினாள். அப்பொழுது என் ஆத்திரத்தின் எல்லையைக் காண்பித்தேன். “உன் போன்று ஒரு பெண் எனக்கு வாழ்க்கைப்பட்டால் நான் தற்கொலைதான் செய்துகொள்ள வேண்டும். சொந்தத் தகப்பனை—அதுவும் மிகவும் சாதாரணமானவர்களை உயர்ந்த அந்தஸ்துக்குக் கொண்டுவரப் பாடுபட்ட ஒரு மனிதனையும், சொந்த சகோதரனையும் மதிக்காத ஒரு பெண்ணாக நீ யிருக்கிறாய். உன் மூடத்தையினால் மணம் செய்து கொள்ளாதே என்று என் மனம் கூறு கிறது. நான் என்றும் இவ்விதமே இருந்து விடத் தீர்மானித்திருக்கிறேன். இந்த எண்ணம் எனக்கு இருந்திருப்பின், நமது தகப்பனார் இவ்வளவு காலம் உன்னிட மிருக்க வேண்டியே நேரிட்டிருக்காது. ஏன் என் கோபத்தைக் கிளப்புகிறாய்?” என்றேன்.

“உனக்கு எப்பொழுதும் பிறரை மதிக்காமல் பேசும் சுபாவம். ஒரு நாள் உன் மாப்பிள்ளைக்கே கோபம் வரும்படி செய்து விட்டாய். அவ ருடன் சாப்பிட எவ்வளவு பேர் விரும்பினாலும் விரும்பியவர்களுக் கெல்

லாம் கிடைக்கக் கூடியதா? தவிரவும், அவரே உனக்கு ஆபீஸராக வந்து விட்டால் அப்பொழுது என்ன செய்வாய்? எல்லாவற்றையும் தீர யோசித்துச் செய்தல் நலம். பின் உன் இஷ்டம்'' என்றாள். "மாப்பிள்ளை என் உத்தியோக விஷயத்தில் கெடுதல் செய்ய முடியும் என்று தானே சொல்கிறாய். நான் தயார்தான். தனி மனிதனை நான் இருக்கும் வரை எனக்கு வேலை போய்விட்டது—அதுவும் பிறர் வேண்டுமென்று குற்ற மில்லாத போது செய்தது எனில் எனக்குச் சிறிதும் கவலை ஏற்படப் போவதில்லை. நான் இன்றைய இரவு வண்டியில் ஊருக்குப் போகப் போகிறேன். பிறகு உன்னிடம் சொல்லிக்கொள்ள முடியாது. இன்னும் ஒரு மாதத்திற்குள் மீண்டும் உன்னைச் சந்திப்பேன். வந்து திரும்பும் பொழுது அப்பாவை அழைத்துச் சென்று விடுவேன்'' என்றேன்.

"நீ இவ்வளவு காலமாக சம்பாதிக்கிறாய். தங்கையைக் காண இரண்டாவது தடவையாக வந்திருக்கிறாய். எனக்கு ஒன்றும் வாங்கி வருவதில்லையே. என்னைப்பற்றி மட்டும் குறை கூறுகிறாய். உன் விஷயமென்ன?'' என்றாள். "எது கேட்பினும் மறுப்பது கிடையாது. நான் எனக்குப் பிடித்த ஒன்றை வாங்கி வந்தால் அது உன் அந்தஸ்துக்கு ஏற்றதில்லை என்று திருப்பி விட்டால் எனக்கு அவமானம். உனக்கு என்ன வேண்டுமாகிலும் கேள். சக்தி யிருந்தால் வாங்கிக் கொடுக்கிறேன்'' என்றேன். "விளையாட்டாகச் சொன்னேன். நீ வாங்கிக் கொடுப்பாயென்று எனக்குத் தெரியும். உன்னைக் கஷ்டத்திற்குள்ளாக்க நான் விரும்பவில்லை. ஆனால் எப்பொழுதாவது சௌகரியமிருக்கும் பொழுது, புதுமாதிரி சாமான்கள் எதையாவது பார்த்தால், பாலனுக்கு வாங்கி அனுப்பிவை. வேறு நான் என்ன சொல்லப்போகிறேன்? நீ இருக்கு மிடம் வந்தால் உன் போன்று ஹோட்டலுக்குப் போக முடியாது. யாரையாவது அனுப்பிச் சாப்பாடு தருவித்துக் கொடு'' என்றாள். அப்பொழுதுதான் அவளுடைய புன்னகையை ஆறு வருடங்களுக்குப் பின் பார்த்தேன். அதில் எனக்குப் பெருத்த சந்தோஷம். நானும் அங்கு சென்ற பின்பு அப்பொழுது தான் சிரித்தேன். அதன் பின்பு என் தகப்பனாரிடம் பேசிக் கொண்டிருந்து அவர் உடல் நலத்தைக் கவனித்துக்கொள்ளும்படி சொல்லிவிட்டுப் புறப்பட்டு வந்து விட்டேன். கமலா சிரிப்பைக் கண்டதில் தான் என் கவலைகளின் பாதையை மறந்தேன். இருப்பினும் இன்னும் என் தகப்பனாரின் நிலையைக் கண்டு என் மனம் வருந்துகிறது. இங்கு வந்த பின்பு கூட இரண்டு நாட்கள் தகப்பனாருடன் இல்லாமல் வந்து விட்டோமே என்ற ஏக்கமும் சேர்ந்தது. இதுதான் என் மனதை வருத்தும் விஷயம். இதற்கு வழி செய்ய வேண்டும் என்பதுதான் கவலை'' என்று முடித்தான் வாசு.

"பொறுமையைச் சிறிது கடைப்பிடித்திருக்கிறாய். நான் இருக்கும் பொழுது நீ யோசித்திருக்க வேண்டியதில்லை. குறைந்தது இரண்டு மாதங்களாவது என்னுடன் உன் தகப்பனாரை வைத்துக்கொள்ள மாட்டேனா? எப்பொழுது அவர் அங்கிருப்பதில் உனக்கு விருப்பமில்லையோ அப்பொழுதே அழைத்து வந்திருக்கலாம். நீ சொல்லி வந்தபடி யில்லாமல் அப்பொழுதே வேண்டுமாகிலும் அவரை அழைத்து வந்து விடு. வேறு ஏதாவது யோசனைகள் செய்திருக்கிறாயா?'' என்றான் சோமு.

"உனக்குக் கஷ்டம் கொடுக்க வேண்டாமெனவே நினைத்தேன். என் தூரபந்து ஒருத்தி யிருக்கிறாள். அவளிட மிருந்து நாளை பதில் எதிர்பார்க்கிறேன். அதன் பின்பு பார்க்கலாம். இப்பொழுது என் மனது சிறிது தேறி யிருக்கிறது'' என்றான் வாசு. உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்தது வெளிப்பட்ட பின் சிறிது சமாதானம் ஏற்படுவது இயற்கையன்றோ!

இதன் பின்பு ஒரு பெரிய வீட்டில் சமையல் வேலைக்கு அமர்ந்தாள். கிடைத்த ஊதியத்தில் பாதியை, தன் குழந்தையின் சாப்பாட்டிற்கு எடுத்துக் கொள்ளும்படி தான் வேலை பார்த்த வீட்டில் சொன்னாள். அவர்களும் ஒப்பினார்கள். மிகுந்த பாதியில் குழந்தையின் படிப்பு, துணி முதலானவற்றிற்குச் செலவு செய்து வந்தாள். இப்பொழுதும் அதே இடத்திலேயே இருக்கிறாள். கையிலிருந்த முதலுடன் இன்னும் கொஞ்சம் சேர்ந்தது. வட்டியும் வந்தது. சுமார் நான்கு மாதங்களுக்கு முன்பு மிகுந்த பிரயாசை எடுத்துக்கொண்டு வாசுவின் விலாசத்தை அறிந்தாள். தன் பெண்ணுக்கு வயது வந்து விட்டதாகவும், மணம் செய்ய நினைத்திருப்பதையும், அவன் சம்மதத்தைக் கேட்டும் எழுதி யிருந்தாள். இதற்குள் வாசு எழுதி யிருந்த பதில் மிகவும் வியப்பை அளிப்பதா யிருந்தது. மணம் செய்ய வேண்டியதுதானென்றும், தான் கொஞ்சம் பணம் முகூர்த்தம் வைத்து எழுதிய உடன் அனுப்புவதாகவும், நல்லவனைப் பார்க்கும் படியும் எழுதி யிருந்தான். முதலில் இதைப்படித்து பத்மாசனி அறிந்துகொள்ள முடியவில்லை. ஒருகால் நாம் அவனுக்குத்தான் என் பெண்ணைக் கொடுக்க உத்தேசம் என எழுத மறந்திருப்பேன் என சமாதானப் படுத்திக்கொண்டு, மறுபடியும் விவரமாக கடிதம் எழுதினாள். அந்தக் கடிதத்திற்கு நாளது வரை பதில் வரவில்லை. சில நாட்கள் முன் வரை எதிர்பார்த்தாள்.

இவ்வித மிருக்கும் பொழுது, வாசு, சோமுவிடம் கூறியபடி பத்மாசனியின் கடிதத்தைத்தான் எதிர்பார்த்தான். அவன் எழுதி யிருந்ததெல்லாம் அவள் அங்கு வாங்கும் சம்பளத்தைப்போல் மற்றும் ஒரு பங்கு அதிகம் தருவதாகவும், அவள் பெண்ணுக்குத் தகுந்த வரன் தேடி மணம் முடிக்க ஏற்பாடு செய்வதாகவும் எழுதி யிருந்தான். இதற்காக தனக்கும் அல்லது தன் தகப்பனுக்கு மட்டிலும் வேண்டிய சமையல் முதலிய பணிகளை கவனித்துக்கொள்ள வேண்டுமெனக் கண்டிருந்தது. இதைப் பார்த்த உடன் பத்மாசனி ஆத்திர மடைந்தாள். பதில் எழுத இரண்டு தடவைகள் பிரயத்தனப்பட்டாள். ஆனால் அவள் விரும்பியபடி எழுத்தில் அமைக்க முடியவில்லை. ஆத்திரம் அடங்கிய பின்பு சாவதானமாக யோசனையில் ஆழ்ந்தாள்.

இது எல்லோருக்குமே சகஜம். கடந்த ஆறு ஆண்டுகளாக மிகவும் பிரியத்துடன் நடத்திவரும் எஜமானர்களை விட்டுப் பிரிந்து செல்ல யாருக்கும் சிறிது கடினம்தான். அதிலும் வாசு எழுதி யிருப்பதைப் பார்த்தால் அவன் தகப்பன் உயிரோடிருக்கும் வரைதான் பத்மாசனிக்கு வேலையுண்டு. அதன் பின்பு. ஒரு சமயம் தள்ளாமை வந்துவிட்டால்—புது இடங்களில் வேலை கிடைக்காது. பழகிய இடமானல் சம்பள மில்லாமல் சோறு கிடைக்கும். அல்லது ஏதாவது பணம் கொடுத்தாலும் கொடுப்பார்கள். திடீரென்று இவன் கடிதம் கண்டு இந்த வேலையை விட்டால் தனக்குக் கஷ்டம் ஏற்படும் என நினைத்தாள். மனதில் ஓர் ஆசை. தன் பெண்ணையும் அழைத்துக் கொண்டுபோய் அவனை மணந்து கொள்ளும்படி கேட்டுப்பார்த்தால் என்ன? அவன் ஒப்ப மாட்டான் என நன்றாகத் தெரிகிறது. முயற்சி செய்து பார்க்கலாமே என்ற எண்ணம். வேலைக்காரியாக அல்லவா வரும்படி எழுதி யிருக்கிறான். ஆனாலும் அவன் சிறு குழந்தைதானே. ஏதோ தெரியாமல் எழுதி யிருக்கலாம். எதற்கும் நாம் செய்யவேண்டிய கடமை ஒன்றிருக்கிறது. அதன்படி நடந்து பார்ப்போம். நடந்தாலும் நடக்கும். இவ்விதம் அவள் மனதில் பல எண்ணங்கள் போராடின. கடைசியில் தன் பெண்ணுடனேயே புறப்பட்டுப் போகத் தீர்மானிதாள். தன் எஜமானரிடம் நான்கு நாட்களில் வந்து விடுவதாகக் கூறி உத்திரவு பெற்றுக் கொண்டாள். பெண்ணுடன் ரயிலேறினாள் வாசு இருக்கும் மதுரபுரிக்கு.

# சுபானு வருஷ சித்திரைமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 13 | 25 | 09 | 0 | 21 | 105 | 07 | 304 | 28 | 10 | 44 | 83 | 55 | 34 | 52 | 46 | 26 | 119 | 08 |
| 2 | 13 | 29 | 06 | 1 | 19 | 117 | 02 | 305 | 13 | 12 | 44 | 84 | 01 | 36 | 04 | 46 | 32 | 119 | 05 |
| 3 | 13 | 33 | 03 | 2 | 17 | 129 | 13 | 305 | 58 | 14 | 41 | 84 | 07 | 37 | 15 | 46 | 39 | 119 | 01 |
| 4 | 13 | 36 | 59 | 3 | 15 | 141 | 25 | 306 | 44 | 16 | 39 | 84 | 13 | 38 | 26 | 46 | 45 | 118 | 58 |
| 5 | 13 | 40 | 56 | 4 | 13 | 154 | 12 | 307 | 29 | 18 | 31 | 84 | 20 | 39 | 37 | 46 | 52 | 118 | 55 |
| 6 | 13 | 44 | 52 | 5 | 11 | 166 | 59 | 308 | 14 | 20 | 23 | 84 | 26 | 40 | 49 | 46 | 58 | 118 | 52 |
| 7 | 13 | 48 | 49 | 6 | 09 | 180 | 25 | 308 | 59 | 22 | 09 | 84 | 33 | 42 | 00 | 47 | 05 | 118 | 49 |
| 8 | 13 | 52 | 45 | 7 | 07 | 193 | 52 | 309 | 45 | 23 | 55 | 84 | 40 | 43 | 11 | 47 | 11 | 118 | 46 |
| 9 | 13 | 56 | 42 | 8 | 05 | 207 | 50 | 310 | 30 | 25 | 33 | 84 | 47 | 44 | 22 | 47 | 18 | 118 | 43 |
| 10 | 14 | 00 | 38 | 9 | 03 | 221 | 49 | 311 | 16 | 27 | 11 | 84 | 54 | 45 | 32 | 47 | 24 | 118 | 40 |
| 11 | 14 | 04 | 35 | 10 | 01 | 236 | 01 | 312 | 01 | 28 | 41 | 85 | 01 | 46 | 43 | 47 | 31 | 118 | 36 |
| 12 | 14 | 08 | 32 | 10 | 59 | 250 | 14 | 312 | 47 | 30 | 12 | 85 | 08 | 47 | 54 | 47 | 38 | 118 | 33 |
| 13 | 14 | 12 | 29 | 11 | 57 | 264 | 26 | 313 | 32 | 31 | 33 | 85 | 15 | 49 | 04 | 47 | 45 | 118 | 30 |
| 14 | 14 | 16 | 25 | 12 | 55 | 278 | 38 | 314 | 18 | 32 | 54 | 85 | 23 | 50 | 15 | 47 | 52 | 118 | 27 |
| 15 | 14 | 20 | 22 | 13 | 53 | 293 | 10 | 315 | 03 | 34 | 06 | 85 | 31 | 51 | 25 | 47 | 59 | 118 | 23 |
| 16 | 14 | 24 | 18 | 14 | 51 | 307 | 43 | 315 | 48 | 35 | 19 | 85 | 39 | 52 | 35 | 48 | 06 | 118 | 20 |
| 17 | 14 | 28 | 15 | 15 | 49 | 321 | 04 | 316 | 33 | 36 | 21 | 85 | 47 | 53 | 45 | 48 | 13 | 118 | 17 |
| 18 | 14 | 32 | 11 | 16 | 47 | 334 | 25 | 317 | 18 | 37 | 24 | 85 | 55 | 54 | 55 | 48 | 20 | 118 | 14 |
| 19 | 14 | 36 | 08 | 17 | 45 | 347 | 58 | 318 | 03 | 38 | 46 | 86 | 03 | 56 | 05 | 48 | 27 | 118 | 11 |
| 20 | 14 | 40 | 04 | 18 | 43 | 1 | 32 | 318 | 48 | 39 | 09 | 86 | 12 | 57 | 15 | 48 | 34 | 118 | 08 |
| 21 | 14 | 44 | 01 | 19 | 41 | 14 | 41 | 319 | 33 | 31 | 51 | 86 | 20 | 58 | 24 | 48 | 41 | 118 | 04 |
| 22 | 14 | 47 | 57 | 20 | 39 | 27 | 51 | 320 | 19 | 40 | 34 | 86 | 29 | 59 | 64 | 48 | 48 | 118 | 01 |
| 23 | 14 | 51 | 54 | 21 | 37 | 40 | 29 | 321 | 04 | 41 | 06 | 86 | 38 | 60 | 43 | 48 | 55 | 117 | 58 |
| 24 | 14 | 55 | 51 | 22 | 35 | 53 | 08 | 321 | 49 | 41 | 38 | 86 | 47 | 61 | 53 | 49 | 03 | 117 | 55 |
| 25 | 14 | 59 | 48 | 23 | 33 | 65 | 13 | 322 | 34 | 42 | 00 | 86 | 56 | 63 | 02 | 49 | 10 | 117 | 52 |
| 26 | 15 | 03 | 44 | 24 | 31 | 77 | 18 | 323 | 19 | 42 | 21 | 87 | 05 | 64 | 12 | 49 | 17 | 117 | 49 |
| 27 | 15 | 07 | 41 | 25 | 29 | 89 | 14 | 324 | 04 | 42 | 33 | 87 | 14 | 65 | 21 | 49 | 24 | 117 | 46 |
| 28 | 15 | 11 | 37 | 26 | 27 | 101 | 10 | 324 | 49 | 42 | 44 | 87 | 24 | 66 | 30 | 49 | 32 | 117 | 42 |
| 29 | 15 | 15 | 34 | 27 | 25 | 113 | 01 | 325 | 34 | 42 | 45 | 87 | 33 | 67 | 39 | 49 | 39 | 117 | 39 |
| 30 | 15 | 19 | 30 | 28 | 23 | 124 | 53 | 326 | 19 | 42 | 46 | 87 | 43 | 68 | 47 | 49 | 47 | 117 | 36 |
| 31 | 15 | 23 | 27 | 29 | 21 | 137 | 06 | 327 | 04 | (வ) 42 | 38 | 87 | 52 | 69 | 56 | 49 | 55 | 117 | 33 |

## ஆகாயக் காட்சி

16உ முன் இரவு மணி 10 நிமிஷம் 52க்கு குஜனுக்கு சந்திரனால் கிரகணம் சேரும். 23உ முன் இரவு மணி 11 நிமிஷம் 30க்கு சசிக்கு வடக்கே பாகை 2 கலை 40ல் சனி-சந்திர சமாகமம் உண்டாகும். 26உ பின் இரவு மணி 1 நிமிஷம் 50க்கு சசிக்கு வடக்கே பாகை 3ல் குரு-சந்திர சமாகமம் சம்பவிக்கும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுபானுஞு சித்திரைமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 1943ஞு ஏப்ரல்மீ—1943ஞு மேமீ

| சித்திரை | ஏப்ரல்மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | புத | நவ12-01 | பூச3-36 | சித்60 | வருஷப் பிறப்பு-விஷு புண்ய |
| 2 | 15 | வியா | தச16-49 | ஆயி9-30 | சி9-30அ | தர்மராஜ தசமி [காலம் |
| 3 | 16 | வெள் | ஏ20-24 | மக14-54 | ம14-54சி | சர்வ-மத்வ-ஏகாதசி |
| 4 | 17 | சனி | து23-19 | பூர19-09 | சி19-09ம | வாமன்ன துவாதசி |
| 5 | 18 | ஞா | திர25-12 | உத்22-10 | அமி60 | மதனத் திரயோதசி |
| 6 | 19 | திங் | சசி25-50 | அ24-37 | சி24-37பி | பௌர்ணமி (பூஜா), கரிநாள், சுபகாரியங்கள் விலக்க |
| 7 | 20 | செவ் | ப◯25-17 | சித்25-49 | சித்60 | சித்ராபௌர்ணமி, புண்யதினம் |
| 8 | 21 | புத | பிர22-45 | சு25-07 | சித்60 | சைத்ர பகுளம் |
| 9 | 22 | வியா | துதி19-47 | வி23-57 | சித்60 | கணிநாரம்பம் |
| 10 | 23 | வெள் | திரு15-32 | அ21-37 | சி21-37ம | |
| 11 | 24 | சனி | சது10-54 | கே18-41 | சித்60 | |
| 12 | 25 | ஞா | பஞ்5-37 சஷ்59-07 | மூல14-55 | அ14-55சி | |
| 13 | 26 | திங் | சப்54-05 | பூ11-21 | மர60 | |
| 14 | 27 | செவ் | அ48-57 | உத்7-17 | பிர7-17சி | |
| 15 | 28 | புத | நவ41-27 | திரு2-59 அவி59-24 | சி22-59பி 59-24-சித் | |
| 16 | 29 | வியா | தச35-23 | சத55-13 | மர55-13 | |
| 17 | 30 | வெள் | ஏ30-36 | பூர52-48 | சித்60 | சர்வ-மத்வ ஏகாதசி |
| 18 | 1 | சனி | து26-27 | உட்51-27 | சி51-37பி | சனிப்பிரதோஷம் [கள் |
| 19 | 2 | ஞா | திர23-24 | ரே49-13 | அ49-13சி | மாச சிவராத்திரி. விவாகாதி |
| 20 | 3 | திங் | சசி21-37 | அசு50-23 | சித்60 | கிருஷ்ணங்கார சதுர்த்தசி, |
| 21 | 4 | செவ் | ●20-23 | பர51-35 | சித்60 | அமாவாஸ்யை, கத்திரி ஆரம்பம். |
| 22 | 5 | புத | பிர20-58 | கி✻53-57 | அ53-57சி | கிருத்திகை விரதம், வைசாக |
| 23 | 6 | வியா | துதி22-14 | ரோ57-36 | மர60 | [சுத்தம் |
| 24 | 1943ஞு மேமீ 7 | வெள் | திரு25-13 | மிரு60-00 | சித்60 | பரசுராம ஜயந்தி |
| 25 | 8 | சனி | சது28-47 | ,, 2-23 | சித்60 | வித்தியாதிராஜ தீர்த்தம் |
| 26 | 9 | ஞா | பஞ்32-58 | திரு8-27 | சித்60 | சங்கர ஜயந்தி |
| 27 | 10 | திங் | சஷ்37-47 | புன14-56 | அ14-56சி | சஷ்டி விரதம். கங்கோற்பத்தி, சர்வ முகூர்த்தம் |
| 28 | 11 | செவ் | சப்43-13 | பூச20-57 | சித்60 | கங்கா சப்தமி [சத்திரம் |
| 29 | 12 | புத | அ47-57 | ஆ27-00 | சித்60 | சிவஞான சுவாமிகள் திருநட் |
| 30 | 13 | வியா | நவ51-36 | மக33-13 | அ27சித் | கணிதாரம்பம் |
| 31 | 14 | வெள் | தச54-33 | பூர37-49 | சித்60 | விருஷப ரவி நா-39, வி-28, விஷ்ணுபதி புண்யகாலம். |

| | | | |
|---|---|---|---|
| | சூர் புத | சனி சுக்ர | குரு |
| செ | 11-ரிஷ-புத 22-மிது-சுக் | | ராகு |
| கே | | | |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR.
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

100-பக்கங்கள் கொண்ட

## சுபானு வருஷத்திய

(நேத்திர ஜீவ நட்சத்திராதி சாந்திர ஸௌரமான) சர்வ முகூர்த்த

# "ஆனந்தபோதினி"

சுத்த திருக்கணித பஞ்சாங்கம்

சென்ற 28 ஆண்டுகளாக நமது "ஆனந்தபோதினி" பஞ்சாங்கத்தைக் கணித்துவந்த திருக் சித்த, ஆரிய சூரிய சித்தாந்த, வாக்கிய கணிதப் பயிற்சியில் வல்ல நிபுணர்கள் பலர் உதவியைக் கொண்டு, ஸ்ரீ S. வாஸன் அவர்களால் சுத்தமாக இப் பஞ்சாங்கம் கணிக்கப்பட்டது.

**பஞ்சாங்கம் 1-க்கு விலை 9 அணா**

தனிப் பஞ்சாங்கம் வேண்டுவோர் விலையோடு தபாற்கூலி 1½-அணா சேர்த்து தபால் பில்லைகளாக அனுப்பவும்.

**25-பஞ்சாங்கங்கள் ரூ. 11—12—0**

25 பஞ்சாங்கம் வேண்டுவோர் ரூ. 11—12—0-ம் மணியார்டர் அனுப்பி சமீபமான ரயில்வே ஸ்டேஷனையும் தெரிவித்தால் ரயில் பார்சலாய் அனுப்பப்படும். ரயில் செலவை செலுத்திப் பெற்றுக் கொள்ளவும்.

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

# ஜோதிஷ் பாவத்திரய நிர்ணயம்

நீங்களே ஒவ்வொருவரும் ஜோதிஷருடைய உதவியின்றி வெகு சுலபமாக உங்களுக்கு இவ்விதமான மனைவியை இன்ன வயதில், இன்ன காலத்தில், இன்ன தெசையில், இன்ன திக்கில், இத்தனை தாரம், இன்ன காரணத்தால் அடைவீர்களென்றும், இதனால் செவ்வாய் தோஷமென்பதற்கு சமாதானமும்,

உங்களுடைய தொழிலை நீங்களே நிர்ணயித்து, அதனால் இவ்வளவு திரவியத்தை, இன்ன திக்கில், இன்ன காலத்தில், இன்ன தெசையில், இன்னார் மூலமாக, இன்ன வழியில் அடையலாமென்றும்,

உங்களுடைய ஆயுள் இவ்வளவுதான் என்பதையும் நிர்ணயம் செய்து கொள்ளலாம். தங்களுடைய நக்ஷத்திரம் தெரியாதவர்களும் நாம நக்ஷத்திரத்தைக்கொண்டு பலனைத் தெரிந்து கொள்ளக்கூடும்.

இப்புத்தகமானது ஜோதிஷர்களுக்கும் ஷை மூன்று பாவ பலாபலன் [illegible] தெளிவாகச் சொல்வதற்கு பெரிதும் சாதகமாகும்.

**இதன் விலை ரூபா 1—8—0**

## ஸ்திரீ புருஷ ஜாதகத் திறவுகோல்

**இதன் விலை அணா 8,**

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லை
ஏன்மலடாய்ப் போவதென்று கேட்பா யாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிருந்தால் புழுதரித்தால் உதிரங் கெட்டால்
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கரு தரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் டை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.

# சீதபேதி (டிசென்டரி) பவுடர்




இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

# குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும் குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0- தபாற் செலவு பிரத்தியேகம்.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒரு விதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினாலுண்டான பலவீனமும் இம்மருந்தினால் நீங்கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்றாது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒரு முறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கும்....

புட்டி 1-க்கு விலை அணா 4. தபாற்கூலி வேறு.

# கண்நோய் மருந்து



இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல், சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச் சிறந்த ஔஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணாடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணா 8. தபாற்கூலி வேறு.

---

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2 பாகம் | 3 | 4 |
| மதனம்மாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாவளி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தஸிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| [illegible] விலாச விநோதம் | 0 | 10 |
| [illegible] யாமினி ... | 0 | 12 |
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| கவின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| காலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணைகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

[illegible] கவசமென்னும் சர்வ தேவதா வசியம்

82513 முதல் பா[illegible]ம் இரண்டாம் பாகமும் சேர்ந்தது. விலை ரூபா 1.

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, சென்னை.

அநேக நற்சாட்சிப் பத்திரங்கள் பெற்ற (ரிஜிஸ்டர்டு.)

# "சகுந்தலா" கூந்தல் வளரும்

# பரிமளத் தைலம்




இத்தைலத்தின் பரிமளம் எவருக்கும் இன்பத்தை யளிக்கும். இது கூந்தலை நீளமாக வளரச் செய்யும். மூளையின் கொதிப்பைத் தணியச் செய்யும். கண்களுக்குக் குளிர்ச்சியைத் தரும். சிரசிலுள்ள பல வியாதிகளையும் நிவர்த்தி செய்யும். கண்களில் நீர்வடிதல், தலையில் புண், மயிர்வெடிப்பு, மயக்கம், தலைச்சுற்றல், தேக நமைச்சல், சொறி, சிரங்கு, கற்றாழை நாற்றம், மனோ வியாகூலம், ஞாபகமற்றதி இவைகளைப் போக்கடித்துத் தேக ஆரோக்கியத்தைத் தந்து வாசனையை உண்டாக்கும். இந்தத் தைலம், பல வனமூலிகைகளால் சாஸ்திரப்படி தயார் செய்யப்பட்டது. இதில் ஒரு டின் தைலம் வாங்கிப் பார்த்தால் இதன் அருமை விளங்கும்.

## மகா சந்தனாதித் தைலம்

வெயிற்காலத்திற்கு அவசியமானது

இந்த தைலத்தைத் தேய்த்துக் கொண்டு வாரத்திற்கு 2 ஸ்நானங்களாக 10 ஸ்நானங்கள் செய்பவர்கட்குத் தீராத பித்தபாண்டு, நாள்பட்ட பழைய சுரம், குளிர்சுரம், 18 வித ஜன்னி, கழுத்திலும் கால்களிலும் உண்டாகும் நோய், அஸ்தி வெட்டை, அஸ்தி சுரம், கபால சூலை, கண்ணெரிவு, கைகாலெரிவு, சொறி, சிரங்கு, நமைச்சல், பீனிசம் முதலிய அனேக நோய்கள் நீங்கி தேகத்திற்கு சுகமுண்டாகும். ஞாபகசக்தியும், கண்களுக்கு நல்ல ஒளியும் உண்டாகும். இப்போது சந்தனாதித் தைலமெனப் பல தைலங்கள் பலரால் வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. நண்பர்கள் அவற்றை வாங்கிப் பரீக்ஷித்துப் பார்த்திருப்பீர்கள். இது அசல் சந்தனத்தைக் கொண்டு மிக்க பணச் செலவிற் செய்யப்பட்டது.

**ஒரு சேர் தைலம் ரூபா 1—12—0. அரை சேர் தைலம் ரூபா 1.**

---

**விலாசம்:-தனலட்சுமி கம்பெனி, தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**